

பாஞ்சாலி சுயம்வரம்.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 15 } சுக்கிலஹு பங்குனிமீ ௧உ / 1930ஹு மார்ச்சுமீ 14உ { பகுதி 9

## கடவுள் வணக்கம்.

ஆங்கார மானகுல வேடவெம் பேய்பாழ்த்த
ஆணவத் தினும் வலிதுகாண்
அறிவினை மயக்கிடு நடுவறிய வொட்டாது
யாதொன்று தொடினு மதுவாய்த்
தாங்காது மொழிபேசும் அரிகரப்பிரமாதி
தம்மொடு சமான மென்னும்
தடையற்ற தேரிலஞ் சருவாணி போலவே
தன்னிலசை யாது நிற்கும்
ஈங்கா ரெனக்குநிக ரென்னப்ரதாபித்து
இராவணா காரமாகி
இதயவெளி யெங்கணும் தன்னரசு நாடுசெய்து
இருக்குமித னொடெநேரமும்
வாங்கா நிலாதடிமை போராட முடியுமோ
மௌனோப தேசகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌன குருவே. (1)

சொல்லாற்றொடர் பொருளாற் றொடராப் பராஞ்சோதி நின்னை
வல்லாளர் கண்ட வழிகண்டிலேன் சகமார்க்கத்திலும்
செல்லா தென்சிந்தை நடுவே கிடந்து திகைத்து விம்மி
அல்லானதும் பகலானதும் வாய்விட் டரற்றுவனே. (2)

நின்னைச் சரண் புகுந்தால் நீகாக்கல் வேண்டுமல்லால்
என்னைப் புறம்விடுதல் என்னே பராபரமே. (3)

# அரும்பொருள் விளக்கம்

(1) இதனால் அடிகள் அகங்காரத்தின் கொடுமையையும் வன்மையையும் உணர்த்துகின்றார்.

(இ-ள்) மௌன நிலையை உபதேசித்தருளிய குருவே! மந்த்ராசாரியனே! யோக சாஸ்திராசாரியனே! திருமூலருடைய பரம்பரையில் எழுந்தருளிய மௌன குருவே! சிறந்த வேடரை நிகர்த்த அகங்காரம் என்னும் கொடிய பேயானது பாழான ஆணவத்தைவிட வலியது. அது என் அறிவினை மயக்கிவிடும். நடு நிலைமையை உணரச் செய்யாது. எப் பொருளைப் பற்றினும் அதில் தானே வீறுகொண்டு நின்று, பொறுமை யிழந்து தகாத வார்த்தைகளைப் பேசிவிடும். மும் மூர்த்திகளோடு தான் சரி நிகர் சமானம் என்று சொல்லும். தட்டுத் தடையின்றிச் செல்லும் தேரில் அச்சாணிக்கு நிகராகத் தன்னிடத்தில் அசைவில்லாமல் இருக்கும். இவ்வுலகில் எனக்கு ஒப்பானவர் யார் என்று இறுமாப்புடன் அகங்கார வடிவினனாகிய இராவணனுடைய உருவங் கொண்டு மனமாகிய ஆகாயமெங்கும் தன்னரசு நாடாகச் செய்து கொண்டிருக்கும். உனது அடிமையாகிய நான் இதனைவிட்டு நீங்காமல் என்றும் போராடிக் கொண்டிருக்க முடியுமோ? (முடியாது. என்னைக் காத்தருளல் வேண்டும் என்றபடி.)

அகங்காரம்—சர்வ சங்கற்பம் செய்யும் கரணம். இராசதகுண ஆதிக்கத்தில் தோன்றுவது.

ஆணவம்—யாதொரு கிரியா வியாபாரத்தையும் நிகழ்த்தாமல், தன்னையுங் காட்டாமல் அடங்கிக் கிடப்பது. ஒரு நிலையில் நிற்க வொட்டாமல் அலையச் செய்வதினால் அகங்காரத்தை அத்தகைய செய்கை உள்ள பேய்க்கு உவமை கூறினார்.

ஆங்கார ஆணவங்களின் தன்மையை,

> "ஆங்காரம் புத்தியின் கண் ணுதித் தகந்தைக்கு வித்தா
> யீங்கார் தானென்னோடொப்பா ரென்றியானென்ன தென்றே
> நீங்காதே நிற்கும்..............."

என்ற சிவ ஞான சித்தியார் அடிகளால் உணர்க

(2) இதனால் பரம் பொருளைக்காணும் வேட்கையை வெளியிடுகின்றார்.

(இ-ள்) சொற் பொருளுக்கு அடங்காத பரஞ்சோதீ! உன்னை ஞானிகள் கண்டு கொண்ட வழியை நான் கண்டிலேன். உலக் விவகாரங்களிலும் என் மனம் செல்லுவதில்லை. ஞான மார்க்கத்திலும் இல்லாமல், லௌகிக மார்க்கத்திலும் இல்லாமல் நடுவே கிடந்து மயங்கி விம்மி அல்லும் பகலும் வாய்விட்டு அரற்றி அழுதுகொண் டிருக்கிறேன் என்பதாம்.

(3) இதனால் சரண் புகுந்த தம்மைக் காக்கவேண்டிய பொறுப்பு பராபரத்தைச் சார்ந்தது என்கின்றார்.

---




## அரசியலும் சமூகவியலும்

"தேவலோகத்தில் அடிமையாய் வாழ்வதைவிட நாக லோகத்தில் சுயேச்சையாய் வாழ்வது மேல்" என்பது அநுபவம் வாய்ந்த ஆன்றோர் கொள்கை. நமது நாடு சுதந்தர இன்பம் அனுபவித்த காலம் ஒன்று உண்டு. ஆனால் அது பழங்கதை ஆகி விட்டது. நம்முடைய பண்டைய நாகரிகம், ஆன்ம ஞானம், கல்வி, அறிவு, கலைப் பெருக்கம், செல்வப் பெருக்கம் முதலியவற்றின் பெருமைகள் எல்லாம் இப்போது இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டன. ஒரு காலத்தில் உலகத்துக்கே உண்டியும், உடையும், அறிவும் வழங்கிவந்த பெருமையுடையது நமது நாடு. நீர், நில, மலைவளங்கள் எல்லாம் முன்பு இருந்தவைகளே இப்பொழுதும் இருக்கின்றன. இவை எங்கேனும் அந்நிய நாடுகளில் குடியேறி விடவில்லை. ஆனால் இவைகளில் உண்டாகும் விளை பொருள்கள் மட்டும் கொள்ளைபோகின்றன. இதனால் கைத்தொழில்கள் அழிந்தன. வறுமைப் பேய் தலைவிரித்தாடுகின்றது. அறியாமை வீறுகொண்டு தாண்டவஞ் செய்கின்றது. பிணிகள் பிடுங்கித்தின்கின்றன. நாட்டு மக்கள் செய்வதறியாது திகைத்து, வாடி வதங்கி, கப்பல் ஏறி அந்நிய நாடுகளில் அடிமைகளாய் அல்லல் உறுகின்றனர்.

விவசாய அபிவிருத்திக்கோ, கைத்தொழில் வளர்ச்சிக்கோ நமது நாட்டில் உள்ள வசதியும் சௌகரியமும் வேறு எந்த நாட்டிலும் காண முடியாது. விசாலமான நிலப் பரப்பையும், முப்பத்து முக்கோடி மக்கட் பெருக்கத்தையும் கொண்டிருப்பது நமது நாடு.

நல்ல நிலைமையில் மாத்திரம் இருந்தால் உலகத்தையே கட்டி ஆளக்கூடிய சக்தி நமது நாட்டுக்கு உண்டு. ஆனால் பன்னூறு ஆண்டு களாக இந்தியாவின் தலை எழுத்து வேறு விதமாகப் போய்விட்டது. சுமார் ஆயிரம் ஆண்டுகளாக அடிக்கடி அந்நியர் படையெடுப் புக்கு உட்பட்டு வந்தமையால் நமது நாடு கட்டுக் குலைந்து சீரழிந்த நிலைமையிலேயே இருந்து வருகிறது. முப்பத்து முக்கோடி மக் களைத் தாங்கி, விரிந்து பரந்த நிலப்பரப்பைக் கொண்டு விளங்கும் நமது பாரத கண்டம், ஆறாயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ளதும், ஐந்துகோடி மக்கள் வசிப்பதும், குளிர் மிகுந்து விளைவற்றுக் கிடப் பதுமாகிய சிறு தீவினரால் அடக்கி ஆளப்படும் மர்மத்தை நேயர் கள் ஊன்றிச் சிந்திக்கவேண்டும். ஆங்கிலேயர் இந்தியாவைக் கைப் பற்றும்போது மக்களுக்குள் ஒற்றுமையின்மையும், பரஸ்பர அவ நம்பிக்கையும், கட்டுத் திட்டம் இன்மையும், அறியாமையும் நிரம்பி யிருந்த உண்மையை நாம் ஒப்புக்கொண்டு தீரவேண்டும். ஆங்கி லேயருக்கு முன்னரும் இந்தியர் அந்நியர் ஆதிக்கத்திலேயே பல நூற்றாண்டுகள் வாழ்ந்து வந்திருக்கின்றனர். அக்காலத்தில் பெரும் பாலும் கொள்ளைக்கும் கொடுங்கோன்மைக்குமே உட்பட்டிருந்தனர் என்று கூறவேண்டும். அதோடு சாதி சமயங்களின் பேரால் ஏற் பட்ட பல ஊழல்களும் சேர்ந்து மக்களைப் பாழாக்கி விட்டன.

ஆங்கில அரசாங்கம் வந்து இவ்வளவு காலம் ஆகியும் மக்களின் கஷ்டகாலம் நீங்கின பாடில்லை. சில அம்சங்களில் ஏதோ நன்மை கள் ஏற்பட்டிருக்கின்றன என்று கூறலாம்; ஆனால் பொருளாதார விஷயத்தில் அடியோடு பாழடைந்து வருகிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. "ஆங்கிலேயர் இந்தியாவை ஆட்சி புரிவது தங்கள் சொந்த நலன் கருதியே யொழிய இந்தியரின் நலன் கருதி அல்ல" என்ற விஷயம் முக்காலும் உண்மை. மக்கள் அநுபவிக் கும் வரிப்பளுவின் கொடுமையை விரிக்க வேண்டியது அநாவசியம். அங்ஙனம் இருந்தும் தேசீயக் கடன் ஆண்டுதோறும் பெருகிக் கொண்டே வருகிறது. இப்போது நாம் இதற்காக ஆண்டு ஒன் றுக்கு நூறுகோடி ரூபா செலுத்த வேண்டியவர்களா யிருக்கின் றோம். சர்க்கார் நிர்வாகச் செலவோ ஏராளமாக ஆகிக்கொண் டிருக்கிறது. முக்கியமாக ராணுவச் செலவைக் கவனியுங்கள். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் முழுவதையும் பாதுகாக்க நமது நாட்டுப் பணம் வருஷந்தோறும் கோடிக்கணக்காகச் செலவாகிறது. தேசீயப்

பொருளாதார நிலைமையை வளர்ச்சி செய்யப் போதிய பணம் இல்லை என்று மறுக்கப்பட்டு வருகிறது. நமது தேச வியாபாரத் துக்கும், கைத்தொழிலுக்கும், விவசாயத்துக்கும் போதிய ஆதரவு கிடையாது. அந்நிய நாட்டுப் பொருள்களே இங்கு ஏராளமாக இறக்குமதியாகின்றன. இதற்காகவே அந்நியப் பொருள் பகிஷ் காரக் கிளர்ச்சி நாட்டில் ஏற்பட்டது. அது வரவரத் தீவிரமாகப் பரவி வருகிறது. இதன் கருத்து நம் நாட்டில் உற்பத்தி செய்யப் படும் பொருள்களுக்குத் தக்க ஆதரவும் பாதுகாப்பும் ஏற்படுத்த வேண்டும் என்பதே.

நம்முடைய மக்கள் கையில் தகுந்த பொறுப்பாட்சி இருந்தா லொழிய எந்தத் துறையிலும் அணுவளவும் முன்னேற முடியாது. அரசியல் பொருளாதார வரவு செலவு விவகாரங்கள் எல்லாம் நமது கையில் இருக்க வேண்டும், பொருள் இல்லாமல் யாராயிருந்தாலும் என்ன செய்ய முடியும்? இதனாலேயே பூரண சுயேச்சையை லட் சியமாக வைத்து காங்கிரஸ் தீவிரமாகப் போராட முற்பட்டிருக் கிறது.

அந்நிய ஆதிக்கம் ஒழியவேண்டும் என்பதில் யாருக்கும் அபிப் பிராயபேதம் கிடையாது. ஆனால் அதற்காகச் செய்யப்படும் முயற்சி—வேலைத்திட்ட விஷயமாகத்தான் பல கட்சிகளுக்குள்ளும் தலைவர்களுக்குள்ளும் முரண்பாடு இருந்து வருகிறது.

காங்கிரஸ் அகில இந்திய ஸ்தாபனம். அது நாற்பத்து நான்கு ஆண்டுகளாக தேச விடுதலைக்காகப் பாடுபட்டு வருகிறது. மகாத்மாகாந்தியடிகளே காங்கிரஸின் உயிர் என்று கூறலாம். மேனாட்டு ராஜீய தோரணையில் போய்க்கொண்டிருந்த தேசீய காங்கிரஸை நமது நாட்டுக்குரிய தலைசிறந்த தருமமாகிய அஹிம்சா தத்துவத்தை அவலம்பிக்கச் செய்த பெருமை காந்தியடிகளுக்கே உரியது. இப்போது காங்கிரஸ் அஹிம்சா தருமமே தனக்குரிய கொள்கையாகக் கொண்டு விளங்குகிறது. அஹிம்சையைக் கடைப் பிடிப்பதினால் சுயராஜ்யம் எந்தக் காலத்திலும் வரப்போவதில்லை என்று வாதிக்கக் கூடியவர்கள், இளைஞர்களில் மாத்திரம் அல்லா மல் பெரியோர்களில் கூட சிலர் இருக்கின்றனர்.

மிதவாதிகளும், வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் வேண்டும் என்று வாதிக்கின்ற கட்சிகளும் இன்னும் ஆங்கில சர்க்காரிடம்

வைத்துக்கொண்டுள்ள நம்பிக்கைக்குக் குறைவில்லை. முன்பு காங்கிரஸ் தீர்மானித்த ஒத்துழையாமைத் திட்டம் பலிக்காமற் போன காரணத்தால் வாலிபர்களுக்குப் பலாத்காரம் ஒன்றே ருசிகரமான வழியாகத் தெரிகிறது. இதற்கு மேனாட்டு விடுதலைச் சரித்திரங்கள் அவர்களுக்கு ஆக்கம் அளிக்கின்றன. இந்த நிலைமையில் சட்ட மறுப்பு முதலிய காரியங்கள் சாந்தமான முறையில் நடத்துவது எவ்வளவு கஷ்டம் என்பதை நேயர்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

நாடு முழுதும் ஒரு நிலைமையில் இல்லை. ஒரு இடத்தில் இருக்கிற உணர்ச்சியும் அறிவும் இன்னொரு இடத்தில் இல்லை. காங்கிரஸ் கமிட்டிகள் எல்லாம் அந்த அந்த இடத்தில் தக்குந்த கட்டுப்பாட்டுடன் இல்லை. தலைவர்களும் ஓரே மாதிரியானவர்கள் அல்லர். இவர்களை எல்லாம் ஒரு கட்டுப்பாட்டுக்குள் அடக்குவது என்பதும் சாமானிய காரியம் அல்ல. இதில் இன்னொரு விஷயம் முக்கியமாகக் கவனிக்கவேண்டும். சட்ட மறுப்புச் செய்து தேசீய விடுதலையைச் சாதிக்கும் முறை நூதனமானது. இதுவரை உலகத்தில் எந்தவிடத்திலும் எக்காலத்திலும் இந்த மாதிரி நடந்ததில்லை. பலாத்காரம்—யுத்தமே உலகை ஆட்சி புரிந்து வருகிறது என்று கூறலாம். ஆனால் சாந்த மூர்த்தி மகாத்மா காந்தியடிகள் இந்நிலையில் சட்டமறுப்பு இயக்கத்தை நடத்தக் கங்கணங் கட்டிக்கொண் டிருக்கிறார். அதன் பலாபலனை எதிர்காலத்திலே தான் நிச்சயிக்கக் கூடும்.

நமது நாட்டுக்கு அரசியல் விடுதலை எவ்வளவு அவசியமாகவும் அவசரமாகவும் இருக்கிறதோ அது போலவே சமூக விடுதலையும் அவசியமான அவசர விஷயமாகும். அரசியலும் சமூகவியலும் பரஸ்பர சம்பந்தம் உடையவைகளே. சமூக முன்னேற்றம் அரசியல் முன்னேற்றத்துக்கு மிகவும் ஆக்கந்தருவ தாகும். சமூகத்தில் ஊழல்கள் நிறைந்திருப்பின் அவற்றின் பலன் அரசியல் நலத்தையும் கெடுத்துவிடும் என்பதில் சந்தேகம் இல்லை. ஆங்கிலேயர் இவ்வளவு தூரம் தலைசிறந்து விளங்குவதற்குரிய காரணம், அவர்கள் சமூகத் துறையில் முன்னேற்றம் அடைந்து கட்டுப்பாட்டுடன் வாழ்ந்து வருதலே யாகும். அவர்களிடம் அறிவு காரணமாகவோ, பொருள் காரணமாகவோ உள்ள ஏற்றத்தாழ்வைத் தவிர வேறு வகையில் எத்தகைய வேற்றுமையையுங் காண முடியாது. ஒரு ஜாதி (Nation) என்ற உணர்ச்சி அவர்களுக்குள் பாராட்டத்தக்க வித

மாய் அமைந்து கிடக்கிறது. உள்ளுக்குள் ஏதோ சொற்ப வேற்றுமைகள் இருந்த போதிலும் தேச க்ஷேமத்தில் ஒரு முகமான அபிப்பிராயங் கொண்டு விளங்குகின்றனர் என்பதை மறுப்பதற்கில்லை. இதனாலேயே அவர்கள் உலகத்தில் பெரிய ஏகாதிபத்தியத்தை நிருவகித்து வருகின்றனர்.

நமது இந்தியாவை உண்மையில் ஒரு தேசம் என்று கூறுவதற்கில்லை. ஒரு கண்டம் என்றே சொல்லவேண்டும். இதனைப் **பரத கண்டம்** என்ற வழக்காறும் நன்கு விளக்கும். சாதி வேற்றுமை, சமய வேற்றுமை, மொழி வேற்றுமை முதலிய இன்னும் எத்தனையோ வேற்றுமைகள் மக்களைப் பிரித்து வைத்திருக்கின்றன. ஒருவருக்கொருவர் சம்பந்தம் கிடையாது. தென்னிந்தியாவிலேயே மலையாளிகளின் போக்கும் நடை யுடை பாவனைகளும் வேறு, ஆந்திரர்களின் போக்கும் நடையுடை பாவனைகளும் வேறு; அதுபோலவே தமிழர்களின் வழக்க வொழுக்கங்களும், கன்னட நாட்டினரின் வழக்க வொழுக்கங்களும் வேறுபட்டிருக்கின்றன. இதே நிலைமைதான் வட இந்தியாவிலும். 'என்னுடைய ஜாதிதான் உயர்ந்தது, என்னுடைய மதந்தான் சிறந்தது' என்ற சண்டைகள் இன்னும் ஓய்ந்த பாடில்லை. "எல்லாச் சாதியும் ஒன்றே, எல்லாச் சமயமும் ஒன்றே" என்று வெறும் வாய் வேதாந்தம் மாத்திரம் பேசுகிறார்களே யொழிய காரியத்தில் அந்த மாதிரி யில்லை. பலவேறு சமயங்களும் அடிப்படையில் ஒன்று என்ற உண்மையை யாம் மறுக்கத் துணியவில்லை. ஆனால் நடை முறையில் அணுவளவாவது அநுசரிக்கப்படுகிறதா என்றே கேட்கின்றோம். சிறந்த சமரச சமய உண்மைகள் நிறைந்து சமரச ஞானிகள் வாழ்ந்திருந்த இந்த நாட்டில் சகோதரத்துவமும் சமத்துவமும் தேய்ந்து போனமை மிகவும் வருந்தத் தக்க தன்றோ?

இப்போது நம் மக்களிடையே பொருளற்ற ஒழுக்க வழக்கங்களே பெரிதும் நிறைந்திருக்கின்றன. அவற்றிற்காக அவர்கள் ஏராளமான பொருளையும் வீண் விரயம் செய்து வருகின்றனர். கல்வி சிறந்த நமது நாட்டில் இப்போது கோடிக்கணக்கான மக்கள் எழுத்து வாசனையின்றி மூடப் பூச்சிகளாய் வாழ்ந்து வருகின்றனர். பெண் மக்கள் நிலைமையும், தாழ்த்தப்பட்டவர்கள் நிலைமையும் மிகவும் பரிதாபகரமான காட்சிகளாகும். தற்கால உலகியல் நிலைமையும் போக்கும் நம் மக்கட்கு ஒரு சிறிதும் தெரியாது என்றே

கூறவேண்டும். ஜன நாயகத்துவம் என்றால் என்ன என்பது எத்தனை பேருக்குத் தெரியும் என்று நினைக்கிறீர்கள்? இந்த உண்மை தெரிய வேண்டுமானால் ஜில்லா போர்டு, தாலூகா போர்டு, முனிசிபாலிட்டி முதலிய ஸ்தல ஸ்தாபன நிருவாகங்களை எடுத்துக் கொள்ளுங்கள். ஆபாசமான கட்சிப் பிணக்குகளும், பொதுப் பொருள் துர்விநியோகங்களும், வாக்காளர்களுக்குப் பொருள் கொடுத்து ஏமாற்றி வாக்குரிமை பெறுவதும் ஆகிய காரியங்களே நிறைந்து கிடக்கின்றன. யாரேனும் சுயநலமின்றித் தங்கள் கடமைகளைச் சரிவர நிறைவேற்றுகின்றார்கள் என்று கூற முடியுமா? இவற்றிற்கெல்லாம் காரணம் என்ன என்பதை யோசித்துப் பாருங்கள். மக்களின் அறியாமையைத் தவிர வேறொன்றுங் கூற முடியாது. அரசியல் தலைவர்கள் என்பவர்களும் சுயநலமும் கௌரவ ஆசையும் கொண்டவர்களாய் மக்கள் நலத்தைப் புறக்கணித்து வருகின்றனர். இவர்களை கோரான வழியில் திருப்பும்படியான அறிவும் ஆற்றலும் பாமர மக்கட்கு இல்லை. தலைவர்கள் என்பவர்கள் சமயத்துக்குத் தகுந்தபடி வேஷம் போட்டு வருவதால் பாமர ஜனங்கள் செய்வதறியாது மயக்கமும் தியக்கமும் கொண்டு விழிக்கின்றனர். இதனால் அரசியல் கிளர்ச்சியில் உணர்ச்சியும் ஊக்கமும் குன்றி மிகுந்த சோர்வு ஏற்பட்டிருக்கிற உண்மையை ஒருவரும் மறுக்க முற்படார் என்று உறுதியாக நம்புகின்றோம்.

சமூகத்தில் சமரசமும் சகோதரத்துவமும் நிறைந்து விளங்கின்யாம் மேலே விவரித்த துரதிருஷ்டமான நிலைமை ஒரு நாளும் ஏற்படாது என்பது உறுதி. அந்நிய ஆதிக்கத்தை ஒழிக்க நாம் எவ்வளவு சிரத்தை செலுத்துகின்றோமோ அவ்வளவு சிரத்தை சமூக முன்னேற்ற விஷயத்திலும் செலுத்தவேண்டும். இந்த இரண்டு முயற்சிகளும் ஏககாலத்தில் நடைபெற வேண்டும். அங்ஙனம் இன்றி அரசியல் சுதந்தரம் ஏற்பட்டால் சமூக முன்னேற்றம் தானாக ஏற்பட்டுவிடும் என்று கூறுவதும், சமூக முன்னேற்றம் ஏற்பட்டு விட்டால் அரசியல் சுதந்தரம் எளிதில் கிடைத்து விடும் என்று தருக்கம் பேசுவதும் வீண் வேலையாகும். ஒன்றை அலட்சியம் செய்து விட்டு இன்னொன்று முன்னேற முடியாது. ஆகையால் அரசியல் வாதிகளும் சமூக சீர்திருத்த வாதிகளும் ஒன்றுபட்டு ஒழுங்கான வேலைத் திட்டத்தை ஏற்படுத்திக் கொண்டு சுயநலமற்ற தொண்டாற்ற வேண்டும் என்று ஆசைப்படுகின்றோம். நம்முடைய கோரிக்கைகளைத் திருவருள் முன்னின்று நிறைவேற்றுவதாக.

ஓம் தத் ஸத்.






# என்ன செய்யப்போகிறீர்கள்?

(சத்திய விஜயநகரம். ஆர். சீனிவாச ராவ்.)

என தன்புள்ள தமிழ் நாட்டுச் சகோதர சகோதரிகாள்! நீங்கள் இப்போது என்ன செய்யப்போகிறீர்கள்? என்று கேட்பதற்கு முன்பாக என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் என்று அறிந்து கொள்வது அவசிய மாகும். ஆனால் நமது 'ஆனந்தனை' வாசிக்கும் நீங்கள் கிணற்றுத் தவளைகளாக இல்லாமல் பொதுவாக உலக விஷயங்களையும், சிறப்பாக நமது தாய் நாட்டின் நிலைமையையும் அறிந்து கொண்டு உங்கள் கடமையை உங்களாலியன்றவரை செய்ய முன் வந்திருக்கிறீர்கள் என்று சற்றும் சந்தேகமில்லாமல் அறிந்து கொண்டே இனி என்ன செய்யப் போகிறீர்கள் என்னும் வினாவைக் கிளத்த வேண்டியதாயிற்று. நம் பண்டைப் பெரும் நாடு பொன் போட்டால் பொன் விளையக்கூடிய தென்பதும் இயற்கை வளங்களால் ஆக்கப்பட்ட தென்பதும், இத்தகைய செழிப்பைக் கண்டு தான் அன்னிய நாட்டவர் இந்நாட்டின் மீது மோகங் கொண்டு படை யெடுத்தும், வியாபார நிமித்தமும் வந்தார்களென்பதும் உங்களனைவருக்கும் தெரிந்த விஷயமே யாகும். அதுகாலை நம் நாடு கல்வி யறிவிலும், நாகரிகத்திலும், செல்வத்திலும், வீரத்திலும் சிறந்து விளங்கியது. ஆன்ம விளக்கத்தில் சிறந்து விளங்கிய மகான்கள் பலர் நம் நாட்டில் தோன்றினர். ஆனால் இன்று நம் நாடு தான் உலகத்திலுள்ள மற்ற தேசங்களை விட எல்லாத் துறைகளிலும் மிக்க கேவலமாக இருக்கின்றது. இதற்குக் காரணம் யாதென ஒவ்வொரு இந்தியனும் ஆராய்ந்து அதை நிவர்த்திக்க வேண்டியது அவனது கடமை யாகும். அவ்வாறு தன் தாய் நாட்டுக்குத் தொண்டு செய்யாமல் மற்ற இன்பங்களிலும் துறைகளிலும் காலங்கழிக்கிறவர்கள் பெற்ற மாதாவை அவமதித்த பாவத்துக் காளாவார்கள். இந்தியர்களாகிய நாம் மாதாவினிடம் அதிக பக்தியுடையவர்கள். 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பதே போல் நாம் பிரயத்தியட்சமாகக் காணும் தெய்வம் தாயும் தந்தையும் தான். ஆகவே தாய்தந்தையர்க்குப் பக்தி செலுத்துவது போலவே அவர்களுக்குச் சமமான நமது தாய் நாட்டுக்குப் பக்தி செலுத்தவேண்டியது இன்றிமையாக் கடமையாகும். "செந்தமிழ் நாடென்னும் போதினிலே, இன்பத்தேன்

வந்து பாயுது காதினிலே; எங்கள் தந்தையர் நாடென்ற பேச்சினிலே, ஒரு சக்தி பிறக்குது மூச்சினிலே' என்று கவிச் சக்ரவர்த்தி பாரதியார் பாடியதே போல் எங்கள் தாய் தந்தையர் நாடாகிய இந்தியா இவ்வளவு கேவலமான நிலைமையில் இருப்பதைப் பார்த்துக் கொண்டு வாளாகிடப்பது இந்திய மக்களாகிய நமக்கு அழகாகாது. நாட்டில் நமது சமூகத்தில் பல குறைபாடுகளும், மூடப் பழக்க வழக்கங்களும், உயர்வு தாழ்வுகளும் இருக்கின்றனவென்பதையும் அவைகளும் நமது இழி நிலைமைக்குக் காரணமென்பதையும் யான் மனமார ஒப்புக் கொள்கின்றேன். அவைகளை ஒழிக்கவும் நாம் அனைவரும் ஒரு முகமாகப் பாடுபட வேண்டியது அவசியமாகும். ஆனால் தேசத்தின் செல்வத்தையும், நாகரிகத்தையும், கைத் தொழில்களையும், ஆன்ம முன்னேற்றத்தையும், வீரத்தையும் அழித்து வருவது அன்னிய ஆட்சி தான் என்று உண்மையாளர்களான பல ஆங்கிலேயர்களும், அமெரிக்கர்களும் ஒப்புக்கொண்டிருக்கின்றனர். நமது நாட்டுத் தேசபக்த சிகாமணிகளும் நன்கு விளக்கி யிருக்கின்றனர். ஆதலின் முதலில் நாம் செய்யவேண்டியது நாட்டில் பொது ஜனப் பொறுப்பாட்சியை நிலை நிறுத்துவதுதான். அன்னிய அரசாங்கம் பொன்னரசாயினும் அதைவிட சாதாரணமான சுய ஆட்சியே தேச மக்களின் நன்மையைப் பயப்பதாகும் என்று மேல் நாட்டாரே கூறியிருக்கின்றனர். சுய ஆட்சி என்றால் பூரண சுயேச்சையா அல்லது பிரிட்டிஷ் ஆட்சிக்குட்பட்ட சுய ஆட்சியா என்பது பற்றி நமக்குக் கவலை வேண்டாம். நாட்டுப் பொது ஜனங்களின் பிரதிநிதிகளால் ஆளப்படும் ஆட்சியே நமக்குத் தேவை. நம் நாட்டின் தற்கால நிலைமையில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக் குட்பட்ட சுய ஆட்சி இருப்பது தான் சிலாக்கியமானதாகும். ஆனால் அதற்காகவே பூரண சுயேச்சையை விரும்புவதும் அதற்காகப் பாடுபடுவதும் கூடாது என்று சொல்வது பொருத்தமாகாது. எத்தகைய சுய ஆட்சியாயினும் பெறுவதற்கு வழி யாது எனபது பற்றிக் கவனிப்போம்.

நாட்டில் பற்பல அரசியல் கட்சியாளர் இருக்கின்றனர். அனைவரும் ஏதோ ஒரு வகையான சுய ஆட்சியை விரும்புகின்றனர். சுய ஆட்சியே வேண்டாமென்று கூறுவார் யாருமில்லை. ஆனால் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக் குட்பட்ட சுய ஆட்சியை உடனே பெறக்கூடிய காலம் வந்து விட்டதென்று மிதவாதிகளென்போர் கூறுகின்றனர். மற்றும் சில கட்சியாளர் அந்த ஆட்சியும் பிரிட்டிஷ் சர்க்கார் மனமுவந்து கொடுக்கும்போது பெறலாமென்கின்றனர். ஆனால் சென்ற நாற்பத்து நான்கு வருஷங்களாகத் தைரியத்துடன் தேச விடுதலைக்காகப் போராடி வரும் காங்கிரஸ் தலைவர்கள் பிரிட்டிஷாருக் குட்பட்ட சுய ஆட்சியும் நாளையே அளிக்கப்படுமென்று நம்ப இடமில்லாததால் பூரண சுயேச்சையையே லட்சியமாகக் கொண்டு நம்மை நாம் அதற்குத் தயாரித்துககொள்ள வேண்டுமென்கின்றனர். சர்க்காருக்கும் நல்ல பிள்ளைகளாக இருந்து, பொது ஜனங்களைத் திருப்தி செய்வதற்காகச் சுய ஆட்சியையும் கேட்பதாக நடிக்க விரும்புவோர் உண்மைத் தேச பக்தர்களாகார். சுய மதிப்பும், பெருந்தன்மையு முள்ள ஆங்கிலேயர்களும் அவர்களை மதிக்கவே மாட்டார்கள். அத்தகையோரால் தங்களுக்கு மட்டும் ஏதேனும் நன்மை செய்துகொள்ள முடியுமே யன்றிப் பொது ஜனங்களின் நன்மைக்காக எத்தகைய காரியத்தையும் சாதிக்க முடியாது. ஆகவே உண்மையில் சுய ஆட்சி பெற விரும்புவோர், ஏதேனும் தக்க திட்

டத்தை வருத்துக்கொண்டு அதற்காக உழைத்து அரசாங்கத்துடன் போராடவேண்டும். இன்றேல் பிரிட்டிஷாராக மனமுவந்து விரைவில் சுய ஆட்சியை அளிப்பார்களெனக் கருதுவது அறியாமையேயாகும். ஆனால் பிரிட்டிஷார் தியாகிகளாதலாலும், அறிவுடையோர்களாதலாலும், இந்திய மக்கள் உண்மையிலேயே சுய ஆட்சிபெற முனைந்து விட்டனர். அதற்காக எத்தகைய தியாகத்தையும் செய்வார்கள் என்று அவர்கள் கண்டு கொண்டால் உடனே சுய ஆட்சியை அளித்து நம்முடன் சகோதர பாவத்துடன் நடந்து கொள்வார்கள். ஆகவே நாம் அத்தகைய நிலைமையை ஏற்படுத்த வேண்டும். அதற்காகவே உலகத்தாரனைவராலும் மகாத்மா வென்றும், மிகப் பெரியாரென்றும் போற்றப்படும் மகாத்மா காந்தியடிகள் உழைத்து வருகின்றனர். அவர் அன்புக் களஞ்சியமாகவும், அஹிம்சையிலேயே பற்றுடையவராகவும் இருப்பதால் பிரிட்டிஷாருக்கு எத்தகைய துன்பத்தையும் தராமல் எல்லாவகைக் கஷ்ட நஷ்டங்களையும் துன்பத்தையும் தாமே ஏற்றுக் கொண்டு பொறுமையுடன் சகித்து சத்தியாக்கிரகம் செய்து பிரிட்டிஷாரை நல்வழிக்குத் திருப்பவேண்டும் என்பது அவருடைய அவா. அத்தகைய சக்தி அவருக்கு உண்டு என்பதிலும் அவர் உண்மைக்குக் கட்டுப்பட்டவர் என்பதிலும் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை. ஆனால் சமீபகாலமாக அவர் செய்யும் முயற்சிகள் நாட்டு மக்கள் பலர் ஈடுபடக் கூடாதவாறு இருப்பதற்காகவே வருந்த வேண்டியதாக இருக்கிறது. எனினும் அவர், மற்றவருடைய அனுதாபத்தை மட்டும் விரும்புகின்றமையால் நாம் அவரைக் குறைகூறாமலும் அவரது வேலைக்குத் தடை ஏற்படாதவாறும் நடந்து கொண்டு அவர் விரும்பும் சில திட்டங்களை யேனும் நிறைவேற்றி வைக்க வேண்டியது நமது கடமையாகும். அதாவது, பிரிட்டிஷ் சாமான்களைப் பகிஷ்காரம் செய்து சுதேசியத்தைக் கைக் கொள்வதாகும். நாட்டிலுள்ள ஒவ்வொருவரும் கத்தர் அணிந்து தீண்டாமையை விலக்கி, மதுபானத்தை யொழித்து சமூக ஒற்றுமை உண்டாகும் வழியில் பரஸ்பரம் அன்புடனும் சகோதரத்துவத்துடனும் நடந்து கொண்டால் மகாத்மாவுக்கு நாம் எவ்வளவோ உதவி செய்தவர்களாவோம்.

பிரிட்டிஷாரை வாதத்தில் வென்று நாம் சுய ஆட்சியை அடைய முடியாது. எல்லாக் கட்சியினரும் இன்றே ஒற்றுமையை அடைந்து ஒரு முகமாகத் தேசீய கோரிக்கையை வற்புறுத்த வேண்டுமென்பதும் இப்போது ஆகக் கூடிய காரியமன்று. ஆகவே நாம் மேற்கூறிய வழிகளில் நடந்து கொண்டு மகாத்மாவுக்குத் துணையாக இருந்து பிரிட்டிஷ் இந்தியாவுக்குச் சுய ஆட்சியை அளித்துவிடக்கூடிய நிலைமையை உண்டுபண்ணுலொழிய நாம் எதையும் பெறமுடியாது. அப்போதுதான் காங்கிரஸ் தலைவர்களல்லாத மற்ற தலைவர்கள் விரும்பும் சுய ஆட்சியாவது கிடைக்கும். ஆதலின் கட்சிபேதங்களை மறந்து, உறக்கத்திலிருந்து விழித்துக் கொண்டு காங்கிரஸ் நிர்மாண திட்டங்களை நாம் நிறைவேற்றி வைப்போமாக. அதுவே நமது கடமை. இக்கடமையைச் செய்யக் கூடிய ஆற்றலை நமக்கு அளிக்கும்படி எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறேன். வந்தே மாதரம்.

# ஓரற்புதச் சந்திப்பு.

—:(o):—

(வித்வ ஸ்ரீ. ம. இராஜகோபால பிள்ளை.)

அசுர வருக்கத்தினனான கம்ஸன் அரசனாய் வட மதுரையை இராஜதானி யாக்கிக்கொண்டு உலகத்தை யாண்டுவருங் காலத்தில், அவனும் அவனைப் போன்ற அசுராமிசர்களான வேறு பலரும் புரிந்து வந்த அக்கிரமங்களைச் சகியாத பூமிதேவியின் வேண்டுகோளுக் கிரங்கிப் பூபாரந் தீர்க்க அவதரித்த கிருஷ்ணபகவான், ஒரு சமயம் ஆனிரை களை யோட்டிக் கொண்டுபோய் ஆயர்பாடிக்குச் சமீபத்திலுள்ள வனமொன் றில் மேய்த்துக்கொண்டிருந்தார். தன் பரிவாரங்களுடன் அந்த வனத்தை யடைந்து சில நாள்களாக மிருக வேட்டை யாடிக்கொண்டிருந்த கம்ஸன், அன்று, தன் பிரதான மந்திரியை நோக்கி "நீர் நமது சேனைகளோடு நாடு போய்ச் சேரும்; நான் இங்குத் தனியே யிருந்து இவ் வன முற்றும் சுற்றி வந்து இயற்கைக் காட்சிகளின் எழில் நலங்கண்டு, இன்று மாலை அல்லது இரவிற்குள் அரண்மனை வந்து சேருகிறேன். எனக்கு அவ்வெண்ணம் திடீரென்றுதித்தது; சேனைகளை ஜாக்கிரதையாக அழைத்துக்கொண்டு போம்" என்று கட்டளை யிட்டுவிட்டு வனஞ் சுற்றத் தொடங்கினான்.

மாலைப்போதாஞ் சமயத்தில், பகவான் சிறு தூற்றலுடன் பெருமழை பெய்யுமாறு சங்கற்பித்து, ஆனிரைகளை வழக்கம்போல் தம் தம் வீடுபோய்ச் சேர அனுப்பிவிட்டு, தாம் மாத்திரம் ஒரு சிறு கட்டுச்சோற்று மூட்டையும் கோலும் ஏந்தியவராய் ஆங்குள்ளதோர் மலைக் குகையொன்றில் தங்கி யிருந் தனர்.

வனவேடிக்கை பார்த்துவரும் கம்ஸ மகாராஜன் "ஓகோ! அந்திப் போது அணுகும் நேரத்தில் மழை பிடித்துக்கொண்டதே! தங்குமிடம் எங்கும் காணோமே! இப்போது நாம் செய்யத்தக்க தொன்றும் தோன்ற வில்லையே. வீணாக மழையில் நனைய நேர்ந்து விட்டதே. இப்படி வரு மென்று முன்னமே தெரியுமானால் சேனைகளுடன் நாமும் வீடு போயிருக்க லாமே. "ஒன்றை நினைக்கி லது வொழிந்திட் டொன்றாகும்" என்பது நம்மிடத்தும் பலித்துவிட்டதே" என்று எண்ணாதும் எண்ணி, பரபரப் பான நடையுடன் நாலா பக்கமும் ஓடலுற்றான். கடைசியில் கண்ணபிரான் தங்கியிருந்த குகையண்டை வந்து அவரை நோக்கி 'அப்பா! நானும் மழை நிற்கும் பரியந்தம் இங்கிருக்கலாமென்று வந்தேன்; கொஞ்சம் இடங் கொடுப்பாயா?" என்றுகேட்டான்.

கண்ணபிரான் ஒருமாடு மேய்க்கும் பையனைப்போல் அழுக்குப் படிந்த துண்டு ஆடையை யுடுத்திக்கொண்டு அங்கிருந்த படியால் அவர் அரசனைப் பார்த்து "என்னை ஏன் ஐயா கேட்கவேண்டும்? இது பொது இடம். எவரும் தடையின்றித் தங்கலாம். மழையிலேன் நனைய வேண்டும். வா ஐயா என் அருகே" என்றார். கம்ஸனும் தங்கலானான்.

சிறிது நேரம் பொறுத்து, கம்ஸன் பையனை நோக்கி "இன்னும் மழை நிற்கக் காணோமே. வேட்டை யாடிய களைப்பால் பசி யெடுக்கின்றது. என் செய்வேன்" என்று வருந்தினான். கண்ணன் "ஐயா! என்னிடத்தில் கட்டமுது இருக்கிறது. நானும சாப்பிடலாமென் றிருக்கிறேன். வேண்டு மானால் அதில் கொஞ்சம் தருகிறேன்" என்றார். கம்ஸன் "அப்பா நீ யாரோ எனக்குத் தெரியவில்லை. சிறுவனா யிருந்தாலும் புத்திசாலியாகக் காணப்படுகிறாய். பசிப்பிணி பொல்லாதது. ஆபத்துக்குப் பாபமில்லை யல்லவா? நீயே அன்போடு என்னைச் சாப்பிடக் கூப்பிடுமபோது நான் ஏன் தடை செய்யவேண்டும். இந்த நன்றியை நான் மறக்க மாட்டேன்" என்றான்.

பிறகு இருவரும் புசிக்க உட்கார்ந்தனர். கண்ணபிரான் "இது வெறுந் தயிர் அன்னம். அவ்வளவு நன்றாயிராது. பசியைத் தணிப்பதற்கு எதுவானு லென்ன? கூச்சப்படாமல் சாப்பிடலாம்" என்ன, கம்ஸனும் "அப்பா! நீ தயிர்ச்சோறு என்று கேவலப்படுத்திச் சொன்னாய். நான் இதைப் புசிக்கப் புசிக்க ஆசை மேலு மேலும் அதிகரிக்கிறதே யொழிய ஒரு சிறிதும் வெறுப் புத்தட்ட வில்லை. இப்படிப்பட்ட அன்னம் உண்மையாய் நான் இதுவரையில் புசித்ததே யில்லை. தேவாமிர்தம் ஒன்று உண்டு; அது தேவர்களுக்கே உரி யது; அதை அருந்துவோர் இறப்பதில்லை யென்று சொல்லக் கேட்டிருக் கிறேன; அதுகூட இதற்கு இணையாகாதென்று நான் உறுதியாக உரைப் பேன். இத்தன்மையான அன்னம் சமைப்பவரும் இந்தப் பூமியிலிருக்கிறார் கள் என்பதை நான் இப்போது தான் கண்டேன். நீ யார் பெற்ற பிள்ளை யோ அறியேன" என்றான்.

கண்ணபிரான் "நானா! இந்த ஊரில் இருப்பவன்றான். இதோ சமீ பத்திலுள்ள ஆயர்பாடிதான் எங்களூர்; நான மாடாடு மேய்க்கும் இடைப் பையன; அதுவே தொழில்; மற்றபடி இப்படிப்பட்டவன் அப்படிப்பட்டவன் என்று புளுக எனக்குத் தெரியாது" என்றார்.

கம்ஸன்:—"தம்பி! என்னவோ எனக்கு உன்னைப் பார்த்தவுடன் உன் மேல் அன்பு தோன்றுகிறது. என் சொந்த மனுஷியாளிடத்திலும் நான் இப்படி அனபு கொண்டதில்லை. உன்னை என் உயிர்போல் பாவிக்கிறேன். காரணம் விளங்கவில்லை" என்றான்.

கண்ணன்:—"இவ்வாறு சிலரிடம் நமக்கு அன்பு உண்டாவது சகஜம்; சிலரிடம் வெறுப்புண்டாவது முண்டு. நீர் யாரோ? அறிய விரும்புகிறேன்" என்றார்.

கம்ஸன்:—"நானா? சொல்லுகிறேன். ஒரு விஷயம் உன்னைக் கேட் டுத் தெரிந்துகொள்ள வேண்டும். அதாவது—நீ ஆயர்பாடியிலிருப்பதாக அறிவித்தாயே; அங்கே கிருஷ்ணன் என்னும் பெயருடைய ஒரு பையன் இருக்கிறான். அவனை நீ பார்த்ததுண்டா?" என்றான்.

கண்ணன்.—"ஐயா! உமக்கு ஆயிரம் நமஸ்காரம். அவனைப் பற்றி ஒன்றும் கேட்க வேணடாம. அவன் பெயரையே எடுக்க வேண்டாம். நல்ல பிள்ளைகளைப்பற்றிப் பேசினால் பலனுண்டு. அடடா! அவனா என்று அவன் பேரைக்கூட நாங்கள் சொல்லுகிறதில்லை. போக்கிரித் தனத்தில் அவனை மிஞ்சியவர் எந்த உலகத்திலும் இருக்கமாட்டார்கள். செய்வதெல் லாம் துடுக்கு. முழங்காலுக்கும் மொட்டைத் தலைக்கும் முடிபோட அவ

ஞெருவனுக்குத்தான் தெரியும். அவன் எந்த வேளையில்தான் பிறந்தானோ; எப்படித்தான் தாய் வயிற்றில் பொறுமையோடிருந்தானோ அது கடவுளுக்குத் தான் தெரியும். சீ! சீ! அப்படியும் ஒரு பிள்ளை உலகத்தில் பிறக்குமா? நிமிஷத்துக்கு நிமிஷம் துடுக்குத்தனந்தான். அவனை நினைத்தாலும் கெர்ப்பம் கலங்குகிறது. அவன் சேஷ்டைகளைக் குறித்து அவனுடைய தாயார் தகப்பனாரிடம் சொன்னால் அவர்கள் கேட்பதில்லை. அவன்மேல் பிராணனை விடுகிறார்கள். அவன் பேச்சே வேண்டாம். அவன் என்னைப்போல்தான் இருப்பான். அவனைப் பார்த்தால் என்னைப் பார்க்கவேண்டியதில்லை என் வீண் பேச்சு. நானே அவன் என்று தீர்மானித்துக்கொள்ளும். நீர் யாரென்பதை தயவுசெய்து தெரிவிக்க முடியுமா?'' என்றார்.

கம்ஸன்:—''நான்தான் உலகத்தை யாளும் கம்ஸ மகாராஜன். அவன் என் தங்கையின் பிள்ளை. அவன் என்னைக் கொல்லப் பிறந்திருப்பதாக தேவர்கள்-ரிஷிகள் முதலியோர் சொல்லுகிறார்கள். அவர்களுடைய கட்டுக் கைதகளை நானு நம்புகிறவன். எப்படியோ அவன் என்னிடத்திலிருந்து தப்பித்துக்கொண்டு ஓடிப்போயிருக்கிறான். அவன் ஆவியைப்போக்க நான் எத்தனையோ ராக்ஷஸ வீரர்களை அவனிடம் மாறு ரூபத்துடன் போகும்படி அனுப்பினேன். போனவர்கள் திரும்பவேயில்லை. ஆனாலும் ஒன்றும் முழுகிப்போகவில்லை. கடைசியில் நான் தனுர்யாகம் ஒன்று செய்யப்போவதாகவும். அதற்கு அவனும் அவனுடைய அண்ணனும் வந்துபோக வேண்டுமென்று அவனுக்கு வேண்டிய ஒருவனை அவனிடம் அனுப்புவதாகவும், அப்போது அவனைக் கொல்லுவதற்கு வேண்டிய சூழ்ச்சிகளைச் செய்யப்போவதாகவும் முடிவு செய்திருக்கிறேன். அவனை என்னவோ நான் லேசில் விடப்போவதில்லை. தகக கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறேன்'' என்றான்.

கண்ணபிரான் இவற்றைக் கேட்டுத் திடீரென்று கம்ஸனுடைய பாதங்களில் வீழ்ந்து தெண்டனிட்டு ''மகாராஜாவா தாங்கள்? ஐயோ நான் தங்களை யாரோ ஒரு வழிப்போக்கர் என்று நினைத்து சாமானிய வார்த்தைகளால் தங்களிடம் பேசி அபசாரத்தைத் தேடிக்கொண்டேனே. நான் அறியாமற செயத பிழையை மன்னிததருள வேண்டும்'' என்றார்.

கம்ஸன்:—அதுபற்றிப் பாதகமில்லை. உன்னிடம் வைத்த அன்பை நான் ஒருபோதும் அலக்ஷியம் செய்யமாட்டேன். மழை நின்றிருக்கிறது. போகலாமா?

கண்ணபிரான்:—''மண்டலாதிபரே! தங்களுக்குக் கோடி நமஸ்காரம். தாங்கள் செய்ய உத்தேசித்திருக்கும் தனுர் யாகததிற்கு என்னையும் வரவழைக்கப் பிரார்த்திககிறேன். அந்த வேடிக்கையை நானும் பார்கக ஆசைப்படுகிறேன்'' என்றார்.

கம்ஸன், ''சந்தேக மென்ன? அவசியம் உன்னை வரவழைக்கிறேன். போவோம் என்று சொல்ல இருவரும் பிரிந்தனர்.

இது கர்ணபரம்பரையான சரித்திரம். இப்படி பாரதத்திலும் பாகவதத்திலும் விடுபட்டுப்போன சில கதைகள் ''அதிக கதா சங்கிரகம்'' என்னும் புத்தக வாயிலாகச் சில வருஷங்களுக்கு முன் வெளிவரப் பார்த்திருக்கிறேன். இக்கதையினால் தெய்வ பலத்தின் முன் மனித பலம் சிறவாதென்பதே கருத்தென உணரலாகும்.

# ஆனந்த சந்திரோதயம்

தமிழாசிரியர் S. V. வரதராஜையங்கார்.

"மறந்து தொட்டாலும் நெருப்பு சுடும்" அதுபோல் மனிதன் தெரிந்தோ தெரியாமலோ, பிரக்ஞையுடனே பிரக்ஞை யில்லாமலோ எப்படியாவது சுவாமியின் நாமத்தைச் சொன்னால் அவனுக்கு அதனால் அடைதற்குரிய பலன் அவசியம் ஏற்படும். எவ்வாறெனில், ஒருவன் தானே தேக சுத்தத்தைக் கருதி ஓர் நதிக்குப் போய் நீராடினாலும், அன்றி ஒரு புராணத்தில் கூறப்படும் பலனைக் கருதிச் சென்று ஸ்நானம் செய்தாலும், அல்லது ஒருவருடைய பலவந்தத்தாற் சென்று நீராடினாலும், ஸ்நானத்தால் விளையும் பலன் கிட்டுகிறது. அதுபோல், பகவானுடைய மகிமையை அறியாதவனாயினும், தமது நாமத்தைச் சொல்லுகிறவனிடம் பகவானுக்கு இரக்க முண்டாகிறது. ஆகையால் அர்த்தம் நமக்கு விளங்கவில்லை யென்று கர்மானுஷ்டானத்தையோ சதாசாரங்களையோ கைவிட்டுவிட லாகாது. பொருள் புலப்படாவிடில் பெரியோரைத் தேடி அறிய முயல்வதே கடமையாகும்.

***

"நம்பாதவன் நஷ்ட மடைவான்" நம்பிக்கையுடன் செய்யப்படுகின்ற காரியங்களைத்தாலும் நற்பலனே உண்டாகின்றதென்று இது காறும், அனுபவ சித்தராக விளங்கிய பெரியோர்களனைவரும் கூறியிருக்கின்றனர். நம்பிக்கை நற்பலனைத் தருகின்றதென்பதை விளக்கும் கதைகளும் ஒவ்வொரு சமய நூல்களிலும் காணப்படுகின்றன. இங்கு நம்பிக்கை யென்பதை ஆத்மார்த்தத்தைப் பொறுத்த வரையில் எடுத்துக் கொள்வோம். இறைவனை நம்பி ஜகத் பிதாவான அவர் காப்பாற்றுவார் என்று நம்பினால் அவர் அகத்தியம் காப்பாற்றுகிறார். இதற் குதாரணமாக ஓர் சிறுகதை யுண்டு ஒரு நதியின் அக்கரையிலுள்ள குருவுக்கு இக்கரையிலிருந்த ஓர் ஆய்ச்சி அனுதினமும் காலையில் பால் கொண்டுபோய்க் கொடுத்து வந்தாள். இப்படியிருக்க ஒரு நாள் சிறிது தாமதித்து வந்தாள். அந்த குரு கோபங்கொண்டு "பெண்ணே! நீ ஏன் இவ்விதம் அடிக்கடி தாமதமாக வருகின்றாய்" என்று வினவினார். அதற்கவள் "பெரியீர்! நான் அதிகாலையிலேயே வீட்டை விட்டுப் புறப்பட்டு விடுகிறேன். என்மீது சிறிதும் குற்றம் இல்லை. ஆற்றங்கரைக்கு வந்து படகுக்காரன் வரும்வரை காத்திருக்க வேண்டியிருக்கிறது.

அவன் வந்ததும் படகு விடுவதில்லை. சற்று பொறு இன்னும் ஜனங்கள் வரட்டு மென்கிறான். இதனாலேயே தாமதமாக வர நேரிட்டு விடுகிறது" என்று கூறினாள். குரு "அட பைத்தியமே! எல்லோரும் பகவந் நாமத்தைச் சொல்லிப் பிறவிக்கடலை வெகு சுலபமாகத் தாண்டிவிடுகிறார்கள். நீ அவருடைய திவ்ய நாமத்தைச் சொல்லி இந்தச் சிறு கால்வாயைத் தாண்டி வர முடியவில்லையா?" என்றார். சிறிதும் கள்ளங்கபட மற்ற அம்மாதரசி வாஸ்தவமென்றே நம்பிச் சென்றாள். அன்று முதல் அவள் நாள் தவறாமல் குறித்த நேரத்தில் அச்சுவாமியாருக்குப் பால் கொண்டுபோய்க் கொடுத்து வந்தாள். அதன்பின், அச்சுவாமியார் ஒரு நாள் அப்பெண்ணைப் பார்த்து "பெண்ணரசி! இப்போது சில நாட்களாக நீ தாமதமின்றி வருகின்றனையே. எப்படி அது? படகுக்காரன் இப்பொழுது மட்டும் சீக்கிரம் வந்து, காலந் தாழ்க்காமல் இக்கரை கொண்டுவந்து சேர்க்கின்றானோ? என்ன?" என்று கேட்க, அவள் "ஐயனே! நான் தாங்கள் உபதேசித்த நாள் முதல் படகில் வருகிறதில்லை. தேவரீர் அடியாளுக் குணர்த்தி யருளிய படி இறைவனுடைய நாமத்தைச் சொல்லிக்கொண்டு நதியைக் கடந்து வருகின்றேன். படகுக்காரனுக்குச் செலுத்தும் துட்டும் மிச்சமாயிற்று," என்றாள். இதைக்கேட்ட சுவாமியார், ஆச்சரியமும் சந்தேகமுமடைந்தவராய் "ஆனால் நீ என்னை அப்படி அக்கரைக்கு அழைத்துக்கொண்டு போகின்றாயா?" என்று கேட்டார். அவளும் அதற்கிணங்கி, அவரை அழைத்துக் கொண்டு நதிக்கரைக்குச் சென்று பகவானுடைய நாமத்தைச் சொல்லிக் கொண்டே தண்ணீரின்மேல் நடந்து சென்றாள். அவளுடைய கள்ளங்கபட மற்ற திடமான நம்பிக்கையுடைய மூட பக்தியைக்கண்ட பகவான் முன் போலவே அன்றும் அவள் பாதங்கள் தண்ணீரில் முழுகாவண்ணம் செய்தார். அவள் சற்று தூரம் சென்று திரும்பிப் பார்த்தாள். பார்த்தவள் குரு நீர் நிலை கொள்ளாமல் தத்தளிப்பதைக் கண்டு 'ஐயனே! தாங்கள் என் பகவந் நாமத்தைச் சொல்லிக்கொண்டு இவ்வாறு தத்தளிக்கின்றீர்கள். உங்கள் அரையாடையை ஒரு கையால் என் தூக்கிக் கொண்டிருக்கிறீர்கள்? பகவான் காப்பாற்றுவார் என்னும் நம்பிக்கை தேவரீருக்கிருந்தால் வேஷ்டி தண்ணீரில் நனைந்து விடுமென்று தூக்கிப் பிடித்துக் கொள்வீர்களா? அபிமானத்தைத் தாங்கள் இன்னும் விட்டதாகக் காணப்படவில்லையே? உங்களுக்குத் தாங்கள் எந்த பகவந் நாமத்தை எனக்குச் சொல்லிக் கொடுத்தீர்களோ அதனிடம் நம்பிக்கை யிருப்பதாகக் காணப்படவில்லையே. அதனால் தான் இவ்வாற்றைக் கடக்கத் தங்களால் முடியாமற் போகிறது" என்றாள். சுவாமியார் வெட்கமடைந்தார். நம்பிக்கைக்கும் கல்விக்கும் சம்பந்த மில்லை. கல்வி யறிவுடையவனே பக்திசெய்வதற் குரியவன், மோக்ஷத்தை யடையத் தக்கவன் என்று கூறுதற்கில்லை. நம்பிக்கையும் உறுதியும் உள்ளக்கனிவுமே சிறந்த பலனைத் தந்து விடுகிறது.

# மாணிக்கத்திரள்.

## கல்விச் செல்வம்.

(ஸி. எ. பெருமாள்.)

1. கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினும் கற்கை நன்றே. (அதிவீரராம பாண்டியன்)

2. கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக. (திருவள்ளுவர்)

3. மன்னனு மாசறக் கற்றோனுஞ் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன். (ஔவையார்)

4. கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்றோ ரணிகலம் வேண்டாவாம். (குமரகுருபர சுவாமிகள்)

5. எல்லா வுயிர்க்குளு மிறைவனே யாயினுங்
கல்லாதார் நெஞ்சத்துக் காணவொண் ணாதே. (திருமந்திரம்)

6. கற்றாரை நோக்கிக் கருத்தழிக; கற்ற வெல்லா
மெற்றே யிவர்க்கு நாமென்று. (நீதிநெறி விளக்கம்)

7. கைப்பொருள் கொடுத்துங் கற்றல் கற்றபின் கண்ணுமாகு
மெய்ப்பொருள் விளக்கு நெஞ்சின் மெலிவிற்கோர் துணையு
[மாகும். (சீவகசிந்தாமணி)

8. கடைநிலத்தோ ராயினுங் கற்றுணர்ந்தோரைத்
தலைநிலத்து வைக்கப்படும். (நாலடியார்)

9. கற்றிலாய் கலை கற்றுணரார் முக
முற்றுநோக்கின் மயானத்தை யொக்குமால். (உபதேச காண்டம்)

10. உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றனன்றே. (புறநானூறு)

11. மேற்பிறந்தாராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றாரனைத்திலர் பாடு. (சோமேசர் முதுமொழி வெண்பா)

12. கல்லாரே யாயினுங் கற்றாரைச் சேர்ந்தொழுகி
னல்லறிவு நாளுந் தலைப்படுவர். (நாலடியார்)

13. கல்லாத மூடரைக் காணவு மாகாது
கல்லாத மூடர்சொற் கேட்கக் கடனன்று. (திருமந்திரம்)

14. முற்றுமுணர்ந்தவ ரில்லை முழுவதூஉங்
கற்றனமென்று களியற்க. (நீதிநெறி விளக்கம்)

15. உடலின் சிறுமைகண் டொண்புலவர் கல்விக்
கடலின் பெருமை கடவார். (நன்னெறி)

16. கற்றதுங்கேட் டதுந்தானே யேதுக்காகக்
கடபடமென் றுருட்டுதற்கோ. (தாயுமான சுவாமிகள்)

17. வறுமையான் மடமை தன்னால் வருந்திநெஞ் சழியுங்காலை
யுறுதிசெய் துணையாங் கற்ற வுணர்வினை வர்க்கு மென்றும்.
(விநாயக புராணம்)

18. கல்லாது மூத்தானைக் கைவிட்டுக் கற்று
ணிளமைபா ராட்டு முலகு. (நான்மணிக் கடிகை)

19. சிலகற்றார் கண்ணு முளவாம் பலகற்றார்க்
கச்சாணி யன்னதோர் சொல். (அறநெறி சாரம்)

20. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு. (திருவள்ளுவர்)

21. மனத்தின் போக்கும் வெளிப்பாடும் அடக்கப்பட்டுப் பலன் அடையுமாறு செய்யும் பயிற்சி எதுவோ அதுவே கல்வி.
(சுவாமி விவேகானந்தர்)

22. ஒருவருக்குக் கல்வித்திறமை ஏற்படவேண்டுமாயின் முதலில் அவர் நல் நடத்தை யுடையவராக இருத்தல் இன்றியமையாதது. (மகாத்மா காந்தி)

23. பிச்சைபுக் காயினுங் கற்றல் மிகவினிதே
கற்றவை கைகொடுத்தல் சாலவு முன்னினிதே. (இனிது நாற்பது)

24. எல்லாம் படித்துணர்ந்தா ரிங்குமிலை எங்குமிலை
எல்லாம் படிததோமென் றேமாப்பேன். (உத்தமவாதம்)

25. வாக்குநயத் தாலன்றிக் கற்றவரை மற்றவரை
யாக்கைநயத் தாலறிய லாகாதே. (நீதி வெண்பா)

26. அவைக்குப்பாழ் மூத்தோரை யின்மை தனக்குப் பாழ்
கற்றறிவில்லா வுடம்பு. (நான்மணிக் கடிகை)

27. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தோர். (திருவள்ளுவர்)

28. ஆசானுடைய உள்ளத்திலே அருள் வரும்படி நடத்தலே கல்விக்குச் சிறந்த கருவி. (ஆறுமுக நாவலர்)

29. கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல. (நாலடியார்)

30. கற்ற திறையளவு கல்லா துலகளவென்
றுற்ற கலைமடந்தை ஓதுகிறாள். (ஔவையார்)

# தமிழ்மொழியின் பெருமை

—(o)—

(பொ. திருகூடசுந்தரம் பிள்ளை, எம். ஏ., பி. எல்.)

*ஏழ்கடல் வைப்பினுந் தன்மணம் வீசி*
*இசைகொண்டு வாழியவே*
*எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி*
*என்றென்றும் வாழியவே.* (பாரதி)

தமிழ் மக்களுக்குத் தங்கள் தாய்மொழியாகிய தமிழ் மொழியின் பால் அளவுகடந்த அன்புண்டு. அவ்வன்பின் பெருக்கத்தால் அவர் தங்கள் மொழியின் பெருமையை எடுத்துப் புகழ்வதில் ஒருபொழுதும் சலிப்படைவதிலர். அங்ஙனம் அவர்கள் புகழ்வதற்கு ஆதாரமாகக் கூறும் காரணங்கள் புராண சம்பந்தமானவை, சரித்திர சம்பந்தமானவை என இரு வகைப்படும். புராண சம்பந்தமாய்க் கூறப்படும் விஷயங்களை இக்காலத்தவர் யாரும் உண்மை என்று ஒப்புக்கொள்ள முடியாது. உண்மை என்று ஒப்புக்கொண்டாலும் அவற்றைக்கொண்டு ஒரு மொழியின் சிறப்பை ஸ்தாபித்தல் இயலாது. இவ்விரு அபிப்பிராயங்களுக்குரிய காரணங்களைக் குறித்து இதற்குமுன் எழுதிய வியாசங்களில் விரிவாய் எழுதியிருந்தேன்.

சரித்திர சம்பந்தமாய்க் கூறப்படும் விஷயங்கள் உண்மையாக இருக்க முடியும். ஆனால் அவற்றைக் கொண்டும் பாஷையின் ஏற்றத்தை நிர்ணயிக்க முடியுமா என்ற விஷயத்தை ஆராய்ச்சி செய்தல் அவசியம். தமிழ்மக்கள் தங்கள் மொழியின் சிறப்பின் ஆதாரங்களாகக் கூறும் சரித்திர சம்பந்தமான விஷயங்கள் ஆறாகும். அவையாவன:—

(1) தமிழ் மொழி தோன்றிய காலத்தொன்மை.
(2) அது பயிலப்பட்ட நிலப் பரப்பு.
(3) இன்றுவரை இருக்கும் இளமை நிலைமை.
(4) அதனின்று பலமொழிகள் தோன்றியமை.
(5) வேறு பாஷைக் குழுவைச் சேராத தனிக்குழுத் தலைமை.
(6) இந்திய மொழிகளில் முதன் முதலாக எழுத்தும் சுவடியும் பெற்றிருந்தமை.

இங்ஙனம் தமிழ்மொழியின் மாண்பிற்குக் கூறப்படும் இதிகாச காரணங்கள் ஆறும் உண்மையானவை தாமா, அவற்றிற்குரிய ஆதாரங்கள் யாவை என்பவற்றை முதற்கண் ஆராய்வோம்.

## தோன்மை

உலகத்திலுள்ள இதர பாஷைகள் எல்லாம் தோன்றுவதற்கு முன்னதாக முதன் முதலில் தோன்றிய பாஷை தமிழ்மொழியே என்பது தமிழர் கூற்று. இதற்குக் காட்டப்படும் சான்றுகள் மூவகைப்படும். அவை யாவன:—

(1) தமிழ் நூல்களில் கூறப்படுவன.
(2) சம்ஸ்கிருத நூல்களில் கூறப்படுவன.
(3) பிறநாட்டார் நூல்கள் கூறுவன.

இச்சான்றுகள் எவை, அவை கூறுவன யாது என்பதை முறையே கவனிப்போம்.

## தமிழ் நூல்கள்

தமிழரின் கடவுளாகிய சிவபெருமானே தமிழ் மொழியைச் சிருஷ்டித்தார் என்பதும், அதைச் சிருஷ்டித்து அகஸ்தியர்க்குக் கற்பித்துத் தென்னாடு அனுப்பினர் என்பதும், அகஸ்தியர் தென்னாடு வந்து தமிழ்ச் சங்கம் நிறுவி அதில் தலைமை வகித்து இலக்கணம் இயற்றியருளித் தமிழ் ஆராய்ந்தார் என்பதும் பழைய தமிழ் நூல்களின் நம்பிக்கை.

வடமொழியைப் பாணினிக்கு
வகுத்தருளி யதற்கிணை யாத்
தொடர்புடைய தென்மொழியை
யுலக மெல்லாந் தொழுதேத்தக்
குடமுனிக்கு வலியுறுத்தார்
கொல்லேற்றுப் பாகர்..................

என்பது காஞ்சி புராணச் செய்யுள். திருவிளையாடற் புராணம் பாடிய பரஞ்சோதி முனிவர்,

விடையுகைத் தவன் பாணினிக்
கிலக்கண மேனான்
வடமொழிக் குரைத்தாங்கியன்
மலயமா முனிக்குத்
திடமுறுத்தி யம்மொழிக் கெதி
ராக்கிய தென்சொல்

என்று கூறியிருக்கின்றார். அங்ஙனமானல் அகஸ்தியர் காலம் யாது?

இறையனர் அகப்பொருளுரை என்னும் நூல் தமிழ்ச்சங்கங்கள் மூன்று இருந்தன என்றும், அவற்றில் முதற் சங்கம் 4440 வருஷங்கள் கடல் கொள்ளப்பட்ட மதுரையில் இருந்தது என்றும், இடைச்சங்கம் 3700 வருஷங்கள் கபாடபுரத்தில் இருந்தது என்றும், கடைச்சங்கம் 1850 வருஷங்கள் வடமதுரையில் இருந்தது என்றும் கூறுகின்றது. கடைச்சங்கத்தின் முடிவு காலம் கி. பி. முதல் நூற்றாண்டு என்று சரித்திர ஆசிரியர்கள் கூறுகின்

றனர். ஆகவே சங்கங்கள் மூன்றின் காலம் மொத்தமாக 9,990 வருஷங்கள்; அவைகளின் இறுதிக்காலம் சுமார் 1,800 வருஷங்களுக்கு முன்; ஆகையால் முதற்சங்கத்தின் ஆரம்பம் இற்றைக்குச் சுமார் 12 ஆயிரம் வருஷங்களுக்கு முன் என்று புலனாகின்றது. அதனால் அகஸ்தியர் தென்னாடு வந்தகாலம் 12 ஆயிரம் வருஷங்களுக்கு முன் என்று கூறவேண்டும். இஃதுண்மையாயின் இத்தகைய தொன்மைமாட்சி வேறு எந்த மொழிக்கும் இல்லை என்பது நிச்சயம்.

## சில ஆதாரங்கள்

இதற்குரிய ஆதாரம் என்ன? இப்பொழுது தமிழ்மொழி வழங்கும் நாட்டின் தெற்கெல்லை கன்னியாகுமரி முனை. இதுவே தெற்கெல்லையாகச் சென்ற சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளாக இருந்துவந்திருக்கின்றது.

நெடியோன் குன்றமும் தொடியோள் பெளவமும்
தமிழ் வரம்பறுத்த தண்புனனாட்டு

என்பது சிலப்பதிகாரம்.

குணகடல் குமரிகுடகம் வேங்கடம்
எனுநான் கெல்லையி னிருந் தமிழ்க்கடலுள்

என்பது நன்னூல் சிறப்புப்பாயிர அடிகள். ஆனால் முற்காலத்தில் தமிழகத்தின் தெற்கெல்லை குமரிமுனை யன்று, குமரி ஆறாகும் என்று தமிழ்நூல்கள் சாற்றுகின்றன. தொல்காப்பியப் பாயிரம்,

வட வேங்கடந் தென்குமரி
ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்

என்று கூறுகின்றது. அதில் காணப்படும் குமரிக்கு இளம்பூரணர் "குமரியாறு" என்று பொருள் செய்கின்றனர். அதுபோல் புறநானூறு,

வடாஅது பனிபடு நெடுவரை வடக்குந்
தெனாஅ துருகெழு குமரியின் தெற்கும்

என்னும் இடத்து நச்சினார்க்கினியர் குமரிக்கு "குமரியாறு" என்று பொருள் கூறுவதையும் கவனிக்க. இளங்கோவடிகள் தாம் சிலப்பதிகாரம் செய்த காலத்து தமிழ்நாட்டின் தெற்கெல்லை குமரிமுனை என்றும் ஆனால் அதற்குமுன் அந்நாடு தெற்கே குமரியாறு வரை பரவியிருந்தது என்றும் அங்ஙனம் பரவியிருந்த நாடு கடலால் கொள்ளப்பட்டதென்றும் கூறுகின்றனர்.

வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள (சிலப்பதிகாரம்)

இறையனார் அகப்பொருளுரையும்,

> "தலைச்சங்கத்தார் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கடல்கொள்ளப்பட்ட மதுரை என்ப......இடைச் சங்கத்தார் சங்க மிருந்து தமிழாராய்ந்தது கபாடபுரத்தென்ப. அக்காலத்துப் போலும் பாண்டி நாட்டைக் கடல் கொண்டது."

என்று கூறுகின்றது. இவற்றிலிருந்து குமரி முனைக்குத் தெற்கே இருந்த நிலம் கடலால் கொள்ளப்பட்ட காலம் சுமார் 7,500 வருஷங்களுக்கு முன் என்று காணப்படும்.

மேனுட்டு ஆசிரியர்களான ஹெக்கல், ஹக்ஸிலி, தோப்பினர்டு முதலியவர்கள் குமரி முனைக்குத் தெற்கே வெகு தூரம் வரை முன்னாளில் கடலுக்குப் பதிலாக நிலமே இருந்தது என்றும், அதற்கு "லேமூரியா" கண்டம் என்பது பெயர் என்றும், அக்கண்டம் பின்னல் கடலால் கொள்ளப்பட்டது என்றும் பல ஆதாரங்களுடன் எடுத்துக் கூறுகின்றனர். அங்ஙனம் அந்நிலம் பலமுறை கடலால் கொள்ளப்பட்டதில் கடைசிக் கடற்கோள் சுமார் 9 ஆயிரம வருஷங்களுக்கு முன்னராகும் என்று ஆசிரியர் எலியட் என்பவர் உரைக்கின்றார்.

ஆகவே, இவ்வாசிரியர்கள் கூறுவதையும் தமிழ் நூல்கள் கூறுவதையும் ஒப்பிட்டுப் பார்த்தால் தமிழ் நூல் உரைப்பது உண்மையென்றும் அதனல் தமிழ்மொழி சுமார் 10 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தமிழ்ச்சங்கம் ஸ்தாபித்து வளர்க்கப்பட்டது என்றும் தெரிவதாகத் தமிழ்ப் பண்டிதர் கூறுவர். தமிழ்ச்சங்கம் ஏற்பட்ட காலம் 10 ஆயிரம் வருஷங்களுக்கு முன் என்றல் தமிழ்மொழி உண்டாகிய காலம் அதற்கு எத்தனை ஆயிரம் வருஷங்களுக்கு முன்னதாக இருக்க வேண்டும் என்பதை வாசகர்கள் ஊகித்தறிந்து கொள்ளலாம்.

## மற்றொரு சான்று

இப்பொழுது காணக்கிடைக்கும் தமிழ் நூல்களில் மிகப் பழமையானது தொல்காப்பியர் செய்துள்ள தொல்காப்பியம் என்னும் இலக்கணமே யாகும். தொல்காப்பியரின் காலம் என்ன?

(1) வேதவியாசர் வேதங்களை ரிக்வேதம், யஜுர்வேதம், சாமவேதம் அதர்வண வேதம் என நான்காக வகுத்தருளுவதற்கு முன்னரே வசித்தவர் தொல்காப்பியர் என்று நச்சினர்க்கினியர் கூறுகின்றார். உலகத்திலுள்ள நூல்களில் எல்லாம் மிகப் பழமையானது ரிக்வேதம் என்பது மேனுட்டுப் பண்டிதர்களின் அபிப்பிராயம.

(2) வடமொழியில் கூறப்படும் முக்கியமான இலக்கணங்கள் ஐந்திரம், பாணினீயம் என இரண்டு. அவற்றுள் பின்னதே முன்னதைவிடச் சிறந்தது என்பது சம்ஸ்கிருத பண்டிதர் கொள்கை. ஆனல் பனம்பாரனர் தொல்காப்பியப் பாயிரத்தில் "ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்" என்றே கூறுவதால் தொல்காப்பியர் பாணினீயத்திற்குமுன் இருந்தவர் என்று விளங்கும். பாணினியின்காலம் கி. மு. 350-க்கு முற்பட்டது என்று சிலரும், கி மு. 700 என்று சிலரும் கூறுகின்றனர். ஆகையால் தொல்காப்பியர்காலம் சுமார் 2,500 வருஷங்களுக்கு முன்னராகும் என்று கூறலாம்.

(3) தொல்காப்பியர் அகஸ்தியரின் மாணக்கர். அகஸ்தியரோ சுமார் 10 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்தவர். அதனல் தொல்காப்பியர் காலமும் சுமார் 10 ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதென்று கூறுவர். அவர் செய்துள்ள தொல்காப்பியம் மிகச் சிறந்த இலக்கணமாதலாலும், இலக்கியம் கண்டதற்கே இலக்கணம் இயம்பல மரபாதலாலும் அவர் காலத்திற்குப் பல்லாயிர வருஷங்களுக்கு முன்னதாகவே தமிழ்தோன்றி வளர்ந்து வந்திருக்க வேண்டுமெல்லவா?

இனி சம்ஸ்கிருத நூல்களில் தமிழின் தொன்மையை ஸ்தாபிக்கக் காணப்படும் ஆதாரங்களைப்பற்றி அடுத்த வியாசத்தில் ஆராய்வோம்.

# பிரபஞ்ச வாழ்வின் பித்தலாட்டம்.

(தெல்லிப்பழை. கா. சின்னப்பா.)

உலகவாழ்வின் அநித்தியத்தை ஒருவன் உள்ளவாறுணர்ந்து அதற்கேற்ப ஒழுகி உண்மை ஞானம் உதிக்கப்பெற்றால் துக்கம் நீங்கி மன அமைதியும் சந்தோஷமுமடைந்து உய்வா னென்பதற் கைய மில்லை. அறிவின்மை காரணமாக நம்மவருள் அநேகர் சிறிது நேரத்திற்கு மாத்திரம் இன்பந்தரத்தக்கவைகளை இடைவிடாது இயன்ற மட்டும் தேடி யடைந்து அனுபவிப்பதற்குப் படுங்கஷ்டம் கொஞ்சமல்ல. நிலையுள்ள இன்பத்தைநாடி நீங்காத அன்புடன் எம்பெருமானை நினைப்பவர்களுடைய தொகை மிகவுஞ் சிறிதா யிருப்பதால் இவர்களுடைய சொல், செயல், சிந்தனை முதலியவைகளைப் பார்த்து நகைப்பவர்களுக்கு மிகவும் வசதியாயிருக்கிறது. ஆனால் கடைசியாய் உண்மையும் நன்மையுமேயன்றி வேறொன்றும் நிலையுறா தென்பது நிச்சயம்.

நாம் நற்கதியடைய விரும்பினால் இப்பிரபஞ்சத்தில் ஏன் வந்து பிறந்திருக்கின்றோ மென்பதை முதலில் ஆராய்ந்தறிதல் வேண்டும். அப்படிச் செய்து பிறவியின் நோக்கத்தை அறியும் வரையும் பிழையான வழியிலிருந்து விலகிப் பெருமானைப்போற்றிப் பெறற்கரும்பேறு பெறுதல் முடியாத காரியம். திருவருளைத் தந்து இரட்சிக்கும்படி சிவபெருமானைக் கேட்பதைவிட்டு, மனைவி, மக்கள், காணி, பூமி முதலியவைகளைத் தரும்படி கேட்க நம்முடைய மனம் எப்பொழுதும் நம்மை ஏவினபடி இருப்பது இயல்பு. அழியும் பொருள்களில் ஆசைவைத்து அவற்றைப் பெறுவதன் பொருட்டு அல்லலுறா திருப்பது இலகுவான காரியமல்ல. பிறக்கும்பொழுது ஆடையாபரணம் முதலியவைகளின்றி எப்படி இவ்வுலகி லுதித்தோமோ அவ்வண்ணமே இறக்கும்பொழுது மிருப்போமென்னும் எண்ணம் எப்பொழுதும் நம்மிடத்திலிருத்தல் வேண்டும். நாம் பாடுபட்டுத் தேடும் பணம் முதலியவைக ளெல்லாம் உண்மைப்பயனை நல்காதென்பதை யூன்றி யுணர்ந்து பரம்பொருளை மாத்திரம் பற்றும் பழக்கம் மனதிற் பதிதல்வேண்டும்.

சந்தோஷத்தையும் மன ஆறுதலையும் நாடும் ஒருவன் தனக்குக் கீழ்ப்பட்டவர்களைப் பார்த்து அவர்களைவிட தான் மேலான நிலையிலிருப்பதை உணர்ந்து அந்த நிலையி லிருக்கத்தக்கதாகச் செய்த எம்பெருமானை

அனுதினமும் வாழ்த்தித் துதித்தல் வேண்டும். அப்படிச் செய்யாமல் தன்னிலும் மேலான நிலையிலிருப்பவர்களைப் பார்த்துப் பெருமூச்சுவிட்டு அவர்களைக் கெடுக்க நினைத்தால் அல்லது அவர்களுடைய நிலையையடைவதற்குப்பிழையான வழிகளைக் கையாடினால் மனஸ்தாபப்பட்டுத் தேகசுகம். மனோ சுகம் இரண்டையும் இழக்கவேண்டி வருமென்பதிற் சந்தேகமில்லை. அவனன்றி யோரணுவு மசையா தென்பதை நாம் அனைவரும் முற்றுயுணர்ந்து அன்னை பிதாக்களைவிட நமக்குச் சொந்தமாயுள்ள இறைவனில் அளவிலா அன்புவைத்து அல்லலற் றிருப்பதைவிட்டு அல்லும் பகலும் விள்ளற்கரும் வேதனைகளை விலைக்கு வாங்கி விழலுக்கு இறைத்த நீர்போல் எம் பிரயாசை முழுவதையும் வீணாக்குவது எவ்வளவு மதியீனம். எத்தனைபேர் சுத்த இருதயமுடையவர்களாய் பரமபதியின் பாதாரவிந்தங்களில் பற்று வைத்துப் பழவினைகளை யறுத்துப் பஞ்சப்புலன்களை யடக்கிக் கடைத்தேறும் பாதையைக் கனவிலுங் கருதாது கண்டதே காட்சி கொண்டதே கோலமென்பதற் கிணங்கச் சீவித்துத் தாம் சின்னாட் பலபிணிச் சிற்றறிவினரென்பதைச் சிறிது மெண்ணாது சீவியகால மெல்லாம் மனங்கலங்கிக் கஷ்டப்படுகிறார்கள்.

நம்முடைய உற்றாருறவின ரெல்லாரும் சந்தையிற் கூட்டத்தைப் போன்றவரென்று எத்தனையோ சமயசாஸ்திர விற்பன்னரான சற்சனர் சாற்றி யிருக்கின்றனர். அதற்குச் சாட்சியான காட்சிகளை ஒவ்வொருநாளும் இவ்வுலகில் நாம் காண்கின்றோம். பல ஊரிலிருக்கும் ஆண்களும் பெண்களும் ஒரு மத்தியஸ்தானத்தி லிருக்கும் சந்தைக்குப் பொருட்களை விலைக்கு வாங்கவும் விற்கவும் வந்து சந்திப்பதை நாம் காண்கிறோம். சந்தையிலுள்ள பல பக்கங்களிலும் கூட்டங் கூட்டமா யிருப்பவர்கள் ஒருவரையொருவர் முன்னொரு போதும் காணாதவர்களா யிருந்தபோதும் சிறிது நேரமே அங்கே நிற்க வேண்டிய சந்தர்ப்பம் ஏற்படுகிறபடியால் ஒருவரோ டொருவர் உறவுபாராட்டுவது மிகவும் கவனிக்கத் தக்கது. அக்கா, தம்பி, அண்ணன், பேத்தி, பேரன் முதலிய உறவு பாராட்டிப் பின் தாங்கள் வந்த காரியம் முடிந்தவுடன் ஒருவருக் கொருவர் பயணஞ் சொல்லிக்கொண்டு தத்தம் இல்லங்களுக் கேகுவது எல்லாரும் நன்கறிந்த விஷயம். எப்படிப்பட்ட உறவு பாராட்டினாலும் ஒவ்வொருவரும் தாம் தாம் வந்த நோக்கத்தை மாத்திரம் ஒருபோதும் மறப்பதில்லை. அதுவுமன்றி தாம் உறவு பாராட்டுவது சொற்ப நேரத்துக்கு மாத்திரம் என்னும் எண்ணம் அவர்கள் மனதைவிட் டகல்வதில்லை. ஆனால் மாயையின் வசப்பட்டு மதியிழந்து மலைவுறும் மனுஷனோ இப்பிரபஞ்சமும் ஓர் சந்தையைப் போன்றதென்பதை உணராது பிறவியின் நோக்கத்தை முற்றாய் மறந்து மனைவி மக்கள், உற்றார் உறவினர், செல்வம், செல்வாக்கு முதலிய சீரற்ற வலைகளிற் சிக்கிச் சிதைவுறுகின்றான்.

பிரபஞ்ச வாழ்வின் பித்தலாட்டத்திற் பெரிதும் வெறுப்புற்றுப் பேதமை யொழிந்து சிவபெருமானின் திருவருளே திவ்யகதியிற் சேர்க்கும் சிறந்த சாதன மென்பதைத் திண்ணமா யெண்ணினால் பிறவிப்பிணியோ டுறவாடாமல் முத்திப்பேறு சித்தி யெய்துவது சத்தியம். ஞானிக்கு வேந்தனும் துரும்புக்குச் சமானமென்றால் உண்மை ஞானம் உதிக்கப்பெற்ற உத்தமனது உன்னதநிலை இன்னதென் றியம்புதல் எளிதன்று. முடிதாங்கிய மன்னரும் மற்றுமுள்ளோரும் முடிவிலொரு பிடிசாம்பராவது நிச்சய மென்பதை நினைத்து இப்பொய்யுலகிலும் அதிற்பொருந்திய பெண்டு பிள்ளை, பண்டு பதார்த்தம் முதலியவைகளிலும் சற்றும் பாசம் வையாது சற்சன ருறவைச் சார்ந்து எத்தனையோ மகான்கள் இத்தரையிற் சீவித்து நற்கதி யடைந்திருக்கின்றனர். அவர்களுடைய சீவிய சரித்திரங்களை நாம் வாசிக்கும் பொழுது நம்முடைய சீவியத்தின் நிலையைக் குறித்து வெட்கித் தலை குனிவதேயன்றி, வேறென்ன செய்யலாம்? கௌபீனதாரிகளா யிருந்து மேலான உண்மைகளை விளக்கிய மேதாவியர்களை அஷ்டைஸ்வரியமும் பொருந்திய அரசர்கள்கூடப் போற்றித் துதிக்கும் பொழுது ஞானிகளின் பெருமையை என்னென் றியம்பலாம்? இப்பெருமைக்கும் இப்பிரபஞ்சத்தின் நிலையிலா வாழ்வில் நிகழும் நிகழ்ச்சிகளாலாகும் பெருமைக்கு முள்ள வித்தியாசம் மிகவும் பெரிதென்று சொல்வது மிகையாகாது. முன்கூறிய பெருமையே உண்மையான பெருமை யென்று மதிக்கப்படத் தக்கது.

ஆலய வழிபாடு அனைவராலும் செய்யப்பட வேண்டிய தென்பதை ஒருவரும் மறுக்கத் துணியார். ஆனால் இப்பிரபஞ்சத்தின் பித்தலாட்டத்திற்குத் தேவையானவைகளைத் தேடுவதற்குச் சாதனமாக மாத்திரம் ஆலயங்களிற் சென்று வழிபடுவதென்றால் அதிலுங் கொடிய பேதமை பிறிதொன்றில்லை. அநேகர் கோயில்களுக்குப்போய், கல்விச் செல்வம், பொருட் செல்வம், பிள்ளைப்பேறு முதலியவைகளைக் குறித்து விண்ணப்பம் செய்வதை நாம் அனைவரு மறிவோம். பிறவிப் பெருங்கடலை நீந்திப் பெருமானின் பெருமையை யுணர்ந்து பேரின்பம் பெற்றுய்வதற்குப் பெரிதும் வேண்டப்படுவதாகிய திருவருளைத் தரும்படி தெய்வங்களைக் கேட்பவர் சிலரினும் சிலரேயாவர். சிதம்பரம், காசி, கதிர்காமம் முதலிய சிவஸ்தலங்களைப் பல முறையும் தரிசித்து வரும் அநேகரைப் பார்த்தால் அவர்களுடைய மனதில் நல்லமாற்ற மிருப்பதாகக் காண்பது மிகவும் அரிதாயிருக்கிறது. யாத்திரைகள் செய்யுமுன் எப்படிப்பட்ட குணமுடையவர்களா யிருந்தார்களோ அப்படிப் பட்டவர்களாகவே யாத்திரைகள் முடிந்த பின்பும் காணப்படுகிறார்கள். இதனால் நாம் தெரிந்துகொள்ளக் கூடிய தென்னவென்றால் யாத்திரை செல்பவர்களி லநேகர் பிழையான இலக்குள்ளவர்களும் பேதமை நிறைந்தவர்களு மென்பதேயாம். பட்டினத்தடியார் பாடிய பல பாக்களுள்,

"ஆரூரனிங்கிருக்க அவ்வூர்த் திருநாளென்
றூரூர்கடோறும் முழலுவீர்—நேரே
உளக்குறிப்பை யறியாத ஊமர்காணீவிர்
விளக்கிருக்கத் தீத்தேடு வீர்."

என்ற வெண்பாவை நாம் அனைவரும் சிந்தித்துத் தெளிதல் அதிகாரன்மை பயத்தற் கேதுவாகும்.

தனக்காக மாத்திரம் சீவிப்பவனுக்கு உள்ள நிலையைவிட என்ன ளவும் கூடாது. ஆதலால் நாம் எப்பொழுதும் நம்மாலியன்ற மட்டும் ஏழைகளுக்கிரங்கி அவர்களுடைய இன்னலைத் தீர்க்க முன்வரவேண்டும். அதோடு கூட நாளுக்கு நாள் பிரபஞ்சப்பற்றைக் குறைத்து பரம் பொருளில் அன்புபாவச்செய்யவேண்டும். ஆண்க ளனைவரையும் சகோதரர்களாகவும் பெண்களனைவரையும் சகோதரிகளாகவும் கருதி நடக்கும் பழக்கம் மனத்தைப் பற்றுதல் வேண்டும். தீமை செய்பவர்களுக்கும் நன்மை செய்வதையே விரதமாக எண்ண வேண்டும். மெய்யை மெய்யாகவும் பொய்யைப் பொய்யாகவும் பகுத்தறியும் ஆற்றலை யிழந்து மாயையிற் சிக்கி மயங்காமல் நம்மைக் காத்து இரட்சிக்கும்படி கருணாநிதியாகிய பெருமானை இடைவிடாது எப்பொழுதும் இரந்து கேட்டல் வேண்டும். அகப்பற்றுப் புறப்பற்றுக்களை அறவே விடுத்து அரனார் பணிக்கு ஆளாவதற்கு அல்லும் பகலும் எல்லாம் வல்ல இறைவனை எத்தி எத்தித் தொழுதல் வேண்டும். இப்படியெல்லாஞ் செய்து நாமெல்லோரும் ஈடேறி இன்புறுவதற்குப் பரிபூரண ராகும் பரமபதி கிருபை புரிவாராக.

## சந்தா நேயர்களுக்கு

நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகை ஒவ்வொரு தமிழ் மாத முதல் தேதியிலும் எக்காரணத்தை முன்னிட்டும் நிறுத்தப்படாமல் தபாலில் சேர்க்கப்பட்டு வந்தும் சிலர் சஞ்சிகை கிடைக்கவில்லை என்று எமக்கு அடிக்கடி தெரிவிக்கின்றனர். இந்த நண்பர்கள் அந்த அந்த ஊர் போஸ்டு மாஸ்டருக்கு விஷயந் தெரிவித்தால் சஞ்சிகைகள் ஒழுங்காகக் கிடைத்து வரும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

ப-ர்.

# வராஹமிஹிரரின் கால நிலை

(ஊற்றுநகர் ந. சிவராம கிருஷ்ண.)

நமது பரத கண்டத்தில் வேதாதி காலம் முதல் தொன்றுதொட்டு வழங்கும் ஸாஸ்திரங்களில் (Sciences) சோதிடமும் ஒன்று. எதொரு விஷயத்திற்கும் காலம் (Time) மதிப்புரை யாசிரியராக விளங்குகின்றது. ஆங்கிலத்தில் ஷேக்ஸ்பியர் (W. Shakespeare) என்பார் எழுதிய நாடகங்களும், மில்டன் (J. Milton) என்பார் எழுதிய பாடல்களும் காலத்தினுன் மதிக்கப் பெற்றதாலேயே அவைகட்கு அத்தகைய சிறப்பு. இதற்கு ஆங்கிலத்தில் டைம்-ப்ரூப் (Time-proof) என்று கூறப்படும். அத்தகைய மதிப்பு சோதிடத்திற்கு மிருக்கின்றதென்பதற்கு ஒருநாளும் ஐயம் என்பதில்லை.

பண்டைக்காலம் சோதிடம் கற்ற வித்யார்த்திகள் பல்வேறு புதிய முறைகள் ஸ்தாபித்தனர். அவைகள் பின்வருமாறு (1) பராசரீயம் (2) ஜைமினீயம் (3) காலசக்ரம் (4) மானஸாகரம் (5) தாசகம் (6) நாடி (7) கௌரீஜாதகம் (8) வேதாங்க ஜ்யோதிஷம் (9) கௌதமம் (10) காளிதாஸம் (11) வ்ருத்தயவனம் (12) ப்ரஹஜ்ஜாதகம் என்பனவாம். இவைகளை 'பத்ததி' அல்லது வகுப்பு என்று கூறுவர். இவைகளில் கடையதாகிய ப்ரஹஜ்ஜாதக பத்ததியின் ஆசிரியர் வராஹமிஹிரனுர் கால நிர்ணயமே நமது முக்கிய எண்ணம். ஆயினும் மூலகாரணமாய் விளங்கும் இவ்வாசிரியர் வரலாற்றையும் சுருக்கிக் கூறல் மிகையாகாது.

வராஹமிஹிரரது தாய்தந்தையரின் பூர்வீகம் ஸாகத்வீபம் என்று புராணப்பிரசித்தமான காஸ்மீர பஞ்சாப் தேசங்களுக்கு இடைவெளியிலுள்ள பிரதேசம். இவர் தகப்பனுர் பெயர் ஆதித்ய தாஸர், தாயார் பெயர் வெளிவந்திலது. ஆதித்யதாஸர், பலரும் புகழும் பைங்குதலேயுடன், தேயம் ஒவ்வாமையால் மகத தேசத்தின் தலைநகரான பாடலீபுத்திரத்திற் சிலகாலம் தங்கி பின்னர் அவந்தி மாநகர் சென்று, தம் குமரரை, அக்காலத்தில் கற்பிக்கப்பட்டு வந்த கல்வித்துறைகளில் பயிற்றி ஆரியத்தில் வல்லுநராக்கினர்.

ஆதித்யதாஸர் காலஞ்செல்ல, வராஹமிஹிரர் அவந்தியில் "கபித்த காஸ்ரமம்" என்ற பெயருடன் பள்ளி ஏற்படுத்தி, அரனின் அட்டமூர்த்தங்களுள் ஒன்றாகிய ஆதித்தன்பால் அன்பு பூண்டு ஒழுகுவாராயினர். அக்காலத்தில் "யவனதேசம்" (Greece) சென்று கணித நூலின் அந்தரங்கங்களை உள்ளவாறறிந்து தமது பெயரால் "கணித வானஸாஸ்த்ரம்" என்ற

நூலியற்றிய ஆரியபட்டர், என்ற தம் காலத்தவரால் யவனர்களின் கணித சாமர்த்தியங்களைக் கேட்டுணர்ந்து அன்னவரின் தூண்டுதலால் மேனாடு சேர்ந்து, தமக்கு மிகவும் விருப்புள்ள சோதிட தத்வங்களைக் கற்று வல்லவராகி, பரதகண்டத்தில் முதன்முதலாக 'ஓரை' (ஹோரா) கணித நூலை இயற்றியவர் இவரே. ஆதலினாலேயே இவர் இயற்றிய "பிரஹஜ்ஜாதகம்" என்னும் சோதிட நூலானது தனிப்பகுப்பாகச் சேர்க்கப்பட்டுப் பன்னிரண்டாயது.

இவர் இயற்றிய நூல்கள் (1) சோதிடப்பகுதிகளில் பன்னிரண்டாவதாகிய "பிரஹஜ்ஜாதகம்" (2) பண்டிதர் போற்றும் "பிருஹத்ஸம்ஹிதை" (3) கிரகங்களின் கதிகளும் அவைகளைக் கணனம் செய்யும் மார்க்கதையும், விவரிக்கும் "பஞ்ச சித்தாந்தம்" என்னும் வானஸாஸ்த்ர கணித களஞ்சியம் (4) ஹோரா ஸாஸ்திரம் கற்க விரும்புவோருக்கு இன்றியமையாததான "நவாம்ச கணிதம்" என்பனவாம்.

## இவர் காலம்

இதுவே நாம் எழுதப்புகுந்த வியாஸத்தின் முக்கிய நோக்கம். இந்து தேச சரித்திர ஆராய்ச்சியாளர்களான மிக்கச் சிறந்த ஸர். வில்லியம் ஜோன்ஸ் (Sir William Jones) டாக்டர் பீடர்ஸன் (Dr. Peterson) ப்ரொபஸர்களான பஹ்லர், ஸ்மித் (Profs. Buhler and Smith) என்ற பலரும், வராஹமிசிராசாரியர் கி. பி. 505-ம் ஆண்டில் ஜன்மித்து 82 வருஷகாலம் உலகின்கண் இருந்து கி. பி. 587-ல் காலகதி அடைந்தார் என்று தந்தம் புத்தகங்களில் வெளியிட்டிருப்பது, அவைகளைப் படித்துணர்ந்தவர்கள் அறிந்த உண்மை.

சிறிது ஊக்கத்தைச் செலுத்தி, நடுநிலையுடன் உண்மையை ஆராயின் மேற்கூறிய காலநிலையானது பொருந்தாது என்பது விளங்குகின்றது. அதன் காரணங்கள் பின்வருமாறு:—

1. இப்பொழுது வர்த்தமான விக்ரமார்க்க சகம் 1987-ம் வருடம். இதில் கி. பி. 1930-ம் வருஷமும் செல்ல விக்ரமார்க்கன் சகம் ஏற்பட்ட வருஷம் கி. மு. 57 என்பது உள்ளங்கை நெல்லிக்கனியாம். ஆகையால் வராஹமிசிரர் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டினர் அன்று என்பது வெளிப்படை. வராஹமிசிரர் விக்ரமார்க்கன் காலத்தவர் என்பது,

"தன்வந்தரி, க்ஷபண, காமரஸிம்ஹ, ஸங்கு,
வேதாலபட்ட, கடகர்ப்பர, காளிதாஸா:
க்யாதோ வராஹமிசிரோ, ந்ருபதே ஸபாயாம்,
ரத்னானிவை, வரருசிர், நவவிக்ரமஸ்ய.—(ஜ்யோதிர் விதாபரணம்.)

என்பதனால் காளிதாஸ், வராஹமிசிரர், முதலான ஒன்பதின்மர் விக்ரமார்க்கனின் அவைக்களத்து நவமணிகளாய் விளங்கினர் என்பதைத் தெளிவாய் விளக்குகின்றது.

2. குப்த வம்ஸத்தினரில் ஒரு மன்னனான சந்திரகுப்த விக்ரமாதித்யன், வட இந்தியாவை கி. பி. 380 முதல் 415 வரை ஆண்டவனென்றும், அவ்வரசனின் சபையிலேயே இந்த நவமணிகள் துலங்கினரென்றும், அவ்வரசன், சுமார் கி. பி. 395-ல் மாளவம், ஸௌராஷ்ட்ரம் முதலிய தேசங்களின் ஸாக வம்சத்திய சிற்றரசர்களைத் தோற்கடித்தவன் என்றும் டாக்டர் ஸ்மித் கூறுவர்.

ஆனால், காளிதாஸர், வராஹமிசிரர் முதலிய ஒன்பது மணிகளின் போஷகராகிய விக்கிரமார்க்கன், ஸாகவம்ஸத்தினராகிய சிற்றரசர்களுக்கு அரசனாகிய உரோமபுரி சக்கரவர்த்தியை யுத்தத்தில் வென்று, சிறையாக உஜ்ஜனி பட்டணத்திற்குக் கொண்டுவந்து திரும்பவும் தனது தேயம் செல்லுமாறு அனுப்பியவன் என்பதை காளிதாசரது ஸ்லோகம் விளக்குகின்றது.

"யோரோம தேசாதிபதிம் ஸகேஸ்வரம்,
ஜித்வா க்ரஹித்வோஜ்ஜயனீம் மஹாஹவே,
ஆனீய ஸம்ப்ராம்ய முமோசதம் த்வஹோ,
ஸவிக்ரமார்க்கஸ் ஸமஸஹ்ய விக்ரமஃ"

இவ்வெற்றியின் ஞாபகார்த்தமாகவும், தனது பெயர் என்றும் நிலவும்படியாகவும் விக்கிரம சகம் (அதாவது கி. மு. 57 முதல்) ஏற்படுத்தினான் என்று தெரிய வருகின்றது. ஆகையால் ஸ்மித் கூறப்போந்த விக்ரமார்க்கன் வேறாக இருக்கலாம். ஏனெனின் காளிதாஸ விக்ரமார்க்கன் ஜெயித்த சக்கரவர்த்திக்கும் ஸ்மித் கூற முன்வந்த விக்ரமார்க்கன் ஜெயித்த சாக வம்சத்திய சிற்றரசர்க்கும் எத்துணையோ வேற்றுமை யுள்ளது.

(3) மூன்றாவதாகிய காரணம் யாதெனின், விக்ரமார்க்கனின் ஆஸ்தான வித்வானாகியவனும், வராஹமிசிரர்க்கு சம காலத்தவராகிய கவி காளிதாஸர் தாம் இயற்றிய "ஜ்யோதிர் விதாபரண"த்தில்,

"வர்ஷைஸ்ஸிந்து தர்ஸனாம்பரகுணை: யாதேககாலஸம்மிதே (3068)
மாஸேமாதவ ஸஞ்ஞிகே விஹிதேக்ரந்தக்ரியோபக்ரமம்
நானாகாலவிதான ஸாஸ்த்ர கதிதஞானம் விலோக்யாதராத்
ஊர்ஜ்ஜே க்ரந்த ஸமாப்திரத்ர விஹிதோஜ்யோதிர் விதாம்ப்ரீதயே."

என்பதனால் கலியுக சகாப்தம் 3068-ம் ஆண்டில் மேற்கண்ட க்ரந்தத்தை ஆரம்பித்ததாக தானே எழுதியுள்ளான். ஆக அவன் எழுதியது இற்றைக்கு சற்றேறக்குறைய 1963 ஆண்டுகள் என்று ஏற்படுகின்றது. ஆகவே அவர் அதை கி.மு. 33ம் வருஷம் துவக்கியிருத்தல் வேண்டுமென்பது நமது துணிபு. இங்ஙன மிருக்கக் காளிதாஸரின் ஸமக காலத்தவரான வராஹ மிசிரரை கி. பி. ஐந்தாம் நூற்றாண்டினர் என்று கூறுவது முற்றிலும் முரணாம்.

பின்னும் மேற்கூறிய காளிதாஸர் வேறென்றும், இரகுவம்ஸாதி காவியங்களும், சாகுந்தளாதி நாடகங்களும் இயற்றிய காளிதாஸர் வேறு என்றும் சிலர் கூறுவர். அதற்கு மறுப்பாக யாம் கூறுவது யாதெனின் அதே "ஜ்யோதிர் விதாபரண"த்தில் காளிதாஸர்:—

"காவ்யத்ரயம் ஸுமதிக்ருத் ரகுவம்ச பூர்வம்,
பூர்வம் ததஸ்ம்ருதி ஹிதம், ஸ்ருதி கர்மவாதம்,

ஜ்யோதிர் விதாபரண காலவிதான ஸாஸ்த்ரம்,
ஸ்ரீகாளிதாஸ கவிதோ ஹிதநோ பபூவ."

என்பதால் "இரகுவம்ஸ" முதலான மூன்று காவியங்களையும், "ஸ்ருதி கர்மவாத"மும் எழுதிய காளிதாஸனுகிய நான் "ஜ்யோதிர்விதாபரண,"த்தை எழுதுகிறேன் என்று கூறியிருக்கிருர். ஆயினும் இங்கு ஓர் ஐயம் நிகழ்தற்கு ஏதுவுண்டு. காளிதாஸர் "காவ்யத்ரயம்" மாத்திரம் எழுதினதாகக் கூறியிருக்கிருர். "சாகுந்தளா"தி நாடகங்கள் எழுதினதாகத் தென்படவில்லையே எனச் சிலர் வினவலாம். அதற்கு சமாதானம் யாதெனின் காளிதாஸர் வராஹ மிசிரரை விட, இளையவரானதாலும், ஜ்யோதிர் விதாபரணம் வரைந்த போழ்து மிக்கச் சிறு பருவத்தினரானதாலும். அவர் பிற்காலத்தில் சாகுந்தளாதி நாடகங்கள் எழுதியிருக்கக்கூடும். எத்தனை காளிதாஸர்கள் இருப்பினும் என்? ஜ்யோதிர் விதாபரணம் எழுதிய காளிதாஸர், வராஹ மிசிரரின் காலத்தவர் என்றும், அவர் காலம் கி. மு. முதல் நூற்றுண்டு என்பதற்கும் ஜ்யோதிர் விதாபரணத்தின் கண்ணேயே தக்க சான்றுகள் உள.

(4) இந்துதேச சரித்திர ஆராய்ச்சியாளருள் மிக்கக் கீர்த்திவாய்ந்த டாக்டர் வின்ஸென் ஏ ஸ்மித் என்பார் பின்வருமாறு தம்புத்தகத்தில் காளிதாஸாதி நவமணிகளின் போஷகரான விக்ரமார்க்கன் கி. மு. முதல் நூற்றுண்டினனுய் இருப்பினும் இருக்கலாம் என்றும் சந்தேகத்துடன், நமது கொள்கையைக் கூறி அதற்கு அத்தாக்ஷி இல்லை யென்றும் (அவர்க்குத் தோன்றியவாறு) அதனுல் விடப்பட்டதென்றும் எழுதியுள்ளார்.

"Chandragupta II later in life, took the additional title of Vikramaditya (Sun of Power) which was associated by tradition with the Raja of Ujjain, who is believed to have defeated the Sakas and established the Vikrama era in 58 or 57 B. C. *It is possible that such a Raja may really have existed, although the tradition has not yet been verified by the discovery of inscriptions, coins, or monuments.*"

(Dr V. A. Smith: The Oxford History of India.)

இது இவ்வாறுனுல் இந்து சரித்திரத்தில் உண்டான பலவிதமான நடவடிக்கைகட்கும் ஸாஸன உறுதிப்பாடுண்டா வென்று கேட்கின்றேம். பின்னும் அன்னர் வேதங்களை எவ்வாறு ஆர்ய புராதன நாகரீகத்திற் காதாரமாய் நம்பினுர்? மற்றும் இராமாயண, மஹாபாரத காலத்தை எவ்விதம் ஸ்மித் நிரூபணம் செய்தாரோ தெரியவில்லை. ஆகையால் இவர் எழுதியதே இவர்க்கு முரணுகின்றது.

நிற்க, காளிதாஸர் தாம் ஜ்யோதிர் விதாபரணம் இயற்றுவதற்கு முன் வராஹ மிசிரர் ஒன்பது ஆண்டுகளில் சித்தியடைந்தார் என்பதாகத் தெரிய வருகின்றமையால் வராஹ மிசிரர் காலம் கி. மு. 124 முதல் கி. மு. 42 என்பது நிச்சயமாய் காணக் கிடைக்கின்றது.

சுபமஸ்து.

---

# "குடியன் மனைவி குமுறியழும் நிலை"

—:—

கரும்புத் தோட்டத்திலே என்ற மெட்டு—(பாரதி.)

கள்ளைக் குடிப்பாரோ கெட்ட கள்ளைக் குடிப்பாரோ—மக்கள்
காதல் மிகுத்துநல் நீதி தவிர்த்துத்தன்
கைப்பொரு ளுமிழந்தே பெருங் கைப்பொரு ளுமிழந்தே—வீட்டிற்
கண்ணைக் கசக்கிக் கலங்கி வருந்தித்தன்
பெண்ணு மழுதழுதே நல்ல பெண்ணு மழுதழுதே—இந்தப்
பேர்பெற்ற பக்காக் குடிகாரப் பாவியைப்
பேணியோ மாலையிட்டேன் நான் பேணியோ மாலையிட்டேன்—வாய்
பேசவுங் கூசுதே நாடவும் வீசுதே (கள்ளைக்) (1)

சொல்லத் தொலையாதே என்னுற் சொல்லத் தொலையாதே—நான்
துன்பப் படுநிலை இன்ப நிலையினர்
தூக்கி விலக்காரோ நன்கு தூக்கி விலக்காரோ—இவர்
துட்டனே தேகக் கட்டு மிழந்தெமைப்
பட்டினி போடுகிறார் தினம் பட்டினி போடுகிறார்—சிறு
பச்சைக் குழந்தை பயந்து நடுங்கிடச்
சண்டையும் போடுகிறார் வீண் சண்டையும் போடுகிறார்—அப்போ
தன்னிலை மாறித் தயங்கி நடுங்குறார் (கள்ளைக்) (2)

கஷ்டப் படுத்துகிறார் பெருங் கஷ்டப் படுத்துகிறார்—கொடுங்
காட்டிலும் நாட்டிலும் வீட்டிலும் ரோட்டிலும்
போதை வெறியாலே பொல்லாப் போதை வெறியாலே—நல்ல
புத்தியுங் கெட்டுப் புரண்டு உருள்கிறார்
ரத்தமுங் கெட்டிடவே சுத்த ரத்தமுங் கெட்டிடவே—பலர்
நாடிக் கரங்கொட்டிக் கூடிச் சிரித்திட
வாந்தி யெடுக்கின்றார் கள்ளை வாந்தி யெடுக்கின்றார்—சுக
வாழ்வு மழிந்து வறுமையி லாழ்ந்திடக் (கள்ளைக்) (3)

கன்னுக்குத் துட்டில்லையேல் தென்னங் கள்ளுக்குத் துட்டில்லையேல்
காப்புங் கொலுசும்நற் காதணி கம்மலும் [—அந்தோ
தாவென் றதட்டிடுவார் இப்போ தாவென்றதட்டிடுவார்—நகை
தந்தாலே ஆச்சு தராவிடி லேச்சுடன்
சாக அடித்திடுவார் என்னைச் சாக அடித்திடுவார்—பின்
தாலியும் விற்றுத் தரித்திரப் பேயாலே
பிச்சை யெடுக்க வைப்பார் ஐயோ பிச்சை யெடுக்கவைப்பார்—இவர்
பேயாய் விழித்தெங்கும் நாயாய் அலைகுவார் (கள்ளைக்) (4)

நீதி நெறியில்லையோ நல்ல நீதி நெறியில்லையோ—இந்த
நேய மிகுத்திடும் இந்திய நாட்டிலே
நீக்கு முறையில்லையோ இதை நீக்கு முறையில்லையோ—எங்கும்
நீக்க மறநின்று காக்குங் கடவுளே !
கண்ணு முனக்கில்லையோ நோக்குங் கண்ணு முனக்கில்லையோ—எமைக்
காத்தருள் என்றடி கைகுவித்தேன் இன்றே
நல்ல வரமளிப்பாய் வாழும் நல்ல வரமளிப்பாய்—தமிழ்
நாட்டெங் கதிர்வேலின் பாட்டை யுணர்ந்தும் பின் (கள்ளைக்) (5)

மீ. கதிர்வேல், தமிழ்த் தொண்டன்.

# அறம் புகாத அணி நகர்

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி. ஏ., பி. எல்.)

கலைமகளும், திருமகளும் களித்து நடம்புரிந்த இலங்கை மாநகரின் பெருமையைக் கல்வியிற் பெரிய கம்பர் கனிந்த மொழிகளாற் புகழ்ந்துள்ளார். வானளாவி நின்ற அவ் வள நகரின் மதில்களை வரையப் போந்த கவிஞர்,

> " கறங்கு கால்புகா, கதிரவன் ஒளிபுகா, மறலி
> மறம் புகாது, இனிவானவர் புகார் என்கை வம்பே,
> திறம்பு காலத்துள் யாவையும் சிதையினும் சிதையா,
> அறம் புகாது அந்த அணிமதிட் கிடக்கை நின்று அகத்தின் "

என்று அவ்வீர நகரின் நிறையையும் குறையையும் நன்கு விளக்கிப் போந்தார். வீரவேந்தனாகிய இராவணன் வீற்றிருந்த அந்நகரில் கடுங் காற்றுச் சுழன்று வீசுவதில்லை. கதிரவனது வெம்மை சென்று சேர்வதில்லை. காலனது கொடுமை செல்வதில்லை. வானவர் பகைமை புகுவதில்லை. இன்னும் அழியாத் தன்மை வாய்ந்த அறமும் நெடிய மதிலைக் கடந்து நகரினுள்ளே நிலவுவதில்லை என்று இலங்கை மாநகரின் பெருமையையும் சிறுமையையும் கவிஞர் ஒருங்கே தொகுத்துரைத்தனர்.

அந்நகரைச் சூழ்ந்து மஞ்சுதோய உயர்ந்த மதில்களும், அந்நகரில் அண்ணாந்த மாட மாளிகைகளும் அமைந்திருந்தமையால் கடுங் காற்றின் வேகம் முறிந்து, எப்பொழுதும் இனிய இளந்தென்றலே அங்கு வீசுவதாயிற்று. கோட்டையா யமைந்த நகரங்களில் காற்றின் வேகம் குறைவா யிருத்தலும், கோட்டை யின்றி வெளியாயுள்ள நாட்டுப்புறங்களில் நெடுங்காற்று சுழன்றடித்தலும் இவ்வுண்மையை இனிது விளக்கக் காணலாம். ஆகவே மன்னர் மன்னனாகிய இராவணன் அரசுபுரிந்த மணிநகரில் மெல்லிய தென்றல் தவழ்ந்ததே யல்லால் வேகமாய்க் காற்று வீசியதில்லை என்னும் உண்மையைக் கம்பர் நயமாக எடுத்துரைத்தார்.

இன்னும் நீர்வளம் நிலவளம் மிகுந்திருந்த அந்நகரில் எங்கும் நீங்காது நிழல் விரித்த நெடிய சோலைகளும் சாலைகளும் நிறைந்திருந்த செம்மை,

> " வேலையுள் இலங்கை யென்னும் விரிநகர் ஒருசார் விண்தோய்
> காலையும் மாலைதானும் இல்லதோர் கனகக் கற்பச்
> சோலை யங்கதனில் உம்பி புல்லினால் தொடுத்த தூய
> சாலையுள் இருந்தாள் ஐய, தவம் செய்த தவமாம் தையல் "

என்று அநுமன் கூறும் அழகிய மொழிகளால் இனிது விளங்கும். இன்னும் அரக்கர் மதுவுண்டு மகிழ்ந்தாடும் அம் மணிநகரின் பெருமையைக் கண்டு களித்த மாருதி,

"பளிக்கு மாளிகைத் தலந்தொறும் இடந்தொறும் பசுந்தேன்
துளிக்கும் தண்ணறும் கற்பகச் சோலைகள் தோறும்
அளிக்கும் தேறலுண்டு ஆடுநர், பாடுநராகிக்
களிக்கின்றார் அலால் கவல்கின்றார் ஒருவரைக் காணேன்"

என்று செந்தேன் துளிக்கும் செஞ்சொற்களால் வியந்து புகழ்ந்தான். இவ்வாறு எம்மருங்கும் பசும்பந்தர் விரித்தாற் போன்று சோலைகள் செறிந்திருந்தமையால் கதிரவன் கொடுமை அந்நகரிற் செல்லாதாயிற்று.

இத்தகைய வளமார்ந்த தலைநகரில் வாழ்ந்த மக்கள் அனைவரும் வயிறார உணவருந்தி, கவலையென்னும் கருநோயை வேரறுத்து, பசியும் பிணியும் இன்றிப் பண்புற வாழ்ந்து வந்தார்கள். அந்நாட்டில் வாழ்ந்த ஒவ்வொரு ஆடவனும் படைக்கலப் பயிற்சி யுடையனாய்த் திண்ணிய உடல்பெற்று விளங்கினான்.

"கழலுலாம் காலும், கால அயிலுலாம் கையும் காந்தும்
அழலிலாக் கண்ணும் இல்லா ஆடவர் இல்லை"

என்று கம்பர் அருளிய வீரமொழிகளில் இவ்வுண்மை விளங்கக் காணலாம். அந்நகரில் வீரக்கழலில்லாக் கால்களும், சூரப்படையில்லாக் கைகளும், வீர ஒளி வீசாக் கண்களும் இல்லையென்று கவிஞர் அவ்வீர நாட்டை எழுதிக் காட்டும் விதம் அறிந்து வியக்கத்தக்கதாகும். இத்தகைய வீரமக்கள் அஞ்சா நெஞ்சும் எஞ்சா வலிமையும் உடைய அரிகளாய் விளங்கிய பெருமையை,

"காயத்தாற் பெரியர் வீரம் கணக்கிலர், உலகம் கல்லும்
ஆயத்தார் வரத்தின் தன்மை அளவற்றார்"

என்று கம்பர் பின்னும் புகழ்ந்து போந்தார். இவ்வியல்பு வாய்ந்த மக்கள் வாழ்ந்த நாட்டில் இளமையில் முதுமையும், இறப்பும் இல்லையென்பது வியப்பாமோ? மூவாக்காலத்திற் சாவாத்தன்மை அந்நாட்டு வழக்கா யிருந்தமையாலேயே மறலியின் மறம் அம்மணிநகரிற் புகாதென்று கம்பர் புகழ்ந்துரைத்தார். அரும்பும் மலரும், காயும் கனியும் நிறைந்த இனிய சோலையில், சுழன்று வீசும் காற்றின் கொடுமையால் கனிகளே யன்றிக் காய்களும், மலர்களே யன்றி அரும்புகளும் உதிர்ந்துவிழக் காண்கின்றோம். அவ்வாறே பசிப்பிணியும் நச்சுநோய்களும் நடமாடும் நாடு நகரங்களில், பாலரும் பருவமாந்தரும் காலன் வாய்ப் புகுதலைக் கண்கூடாகக் காணலாம். இத்தகைய பசியும் பிணியும் இன்றி இலங்கை மாநகரில் வசியும் வளமும் மிகுந்து, மக்கள் திண்ணிய மெய்யும் மனமும் உடையராய்த் திகழ்ந்தமையால், அந்நகரில் காலனது கொடுமை செல்லாதாயிற்று.

இவ்வாறு காற்றின் வேகமும், கதிரவன் வெம்மையும், காலன் கொடுமையும் செல்லாத வீரமா நகரில் வானவர் வலிமை செல்லாதாயிற்றென்று சொல்லவும் வேண்டுமோ? இலங்கையில் வாழ்ந்த தானவரை வானவர் மனம் புழுங்கி வெறுத்தாரேனும், அவரது உடல் வலியும் படை வலியும் கண்டு அஞ்சி ஒடுங்குவாராயினர். வீரவாழ்க்கையை மேற்கொண்ட அரக்கர் முன்னே, போக வாழ்க்கையே பெரிதென்று கொண்ட அமரர், வெயிலிடையுற்ற வெண்ணெய் போல் மெலிந்து தேய்ந்தார் என்பதில் ஐயமுண்டோ? இவரது எளிமையை "வானவர் புகார் என்கை வம்பே" என்று கவிஞர், சொல்லாமற் சொல்லிய நயம் சிந்திக்கத்தக்கதாகும்.

இனி, எவ்வகை பகையும் இன்றி வீரமாதின் இருப்பிடமாய் இலங்கிய இலங்கைமா நகரில், அழியாத்தன்மை வாய்ந்த அறமும் செல்ல மாட்டா தென்று கவிஞர் அறிவிக்கும் முறை அழகு வாய்ந்ததாகும். அறத்தின் வலிமையை அறிவுறுத்தப்போந்த ஆசிரியர் வள்ளுவனார்,

> "அன்று அறிவாம் என்னாது அறஞ் செய்க, மற்றது
> பொன்றுங்கால் பொன்றாத் துணை"

என்று போற்றுவாராயினர். அழியும் தன்மைத்தாய இவ்வுலகில் என்றும் அழியாது நிற்பது அறம் ஒன்றே யாகுமென்று அறிவோர் நன்கு அறி வுறுத்திப் போந்தார். இத்தகைய பெருமை வாய்ந்த அறம் இலங்கை மாநகரினுள்ளே புகுந்ததில்லை யென்று கம்பர் கூறும் முறை கருதத்தக்கதாகும். அறம் பொருள் இன்பம் என்று ஆன்றோர் போற்றும் முப்பொருள்களில் தலையாய் நிற்கும் தகைமை சான்ற அறம் அந்நகரில் இல்லாமையாலேயே,

> "இரக்கம் என்றொரு பொருள் இலாத நெஞ்சினர்
> அரக்கர் என்றுளர் சிலர் அறத்தின் நீங்கினார்."

என்று ஈரமற்ற அரக்கர் நீர்மையைக் கவிஞர் எழுதி யமைப்பாராயினர். பொருளல்லவற்றைப் பொருளென்று போற்றிய மருள் மலிந்த மக்கள் அழியாப் பொருளாய் அறத்தினைப் போற்றாது புறக்கணித்தார்கள். அறத்தின் வழி நின்ற பொருளும் அறத்தின் வழி யமைந்த இன்பமுமே இம்மண்ணுலகில் வாழும் மாந்தர்க்கு உறுதி பயக்கு மென்று அறநூலறிந்தோர் கூறிப் போந்தார். அற நெறியை அடிப்படையாகக் கொள்ளாத பொருளும், இன்பமும் பெருகி வளர்வன போல் தோன்றினும், ஒருகாலத்திற் பொன்றி ஒழியுமென்று ஆன்றோர் அருளிய வாய்மைக்கு இலங்கை மாநகரே இணையற்ற சான்றாகும். சுற்றிய கடலாலும் முற்றிய திருவாலும் பகைவராது கொற்றத்தைப் பழித்த வீரமா நகரம், ஈரமற்ற இடமாயிருந்தமையால் இராமனது அம்புக்கு இரையாயிற்று.

அறநெறி திறம்பாத அரசன் ஆளும் நாட்டில் மாதவர் நோன்பும், மடவார் கற்பும் தலைசிறந்தோங்குமென்றும், மறம் வாடித் தளரு மென்றும் அந்நூல் கூறுகின்றது. இதற்கு மாறாக மறநெறியை மேற்கொண்ட இலங்கை மன்னன் மாதவர் நோன்பையும் மங்கையர் கற்பையும் அழிக்க முயன்றமையாலேயே, முக்கோடி வாழ் நாளும் முயன்று பெற்ற வரமும் முறிந்து முடியலுற்றான். அற நெறியைத்தானும் அறியானாய், அறிந்துரைக்கும் அறிவோரையும் துணைக் கொள்ளானாய் அழிவு சூழ்ந்த அரக்கர்கோனை நோக்கி,

> "கடிக்கும் வல்லரவும் கேட்கும் மந்திரம் களிக்கின்றோயை
> அடுக்கும் ஈதடாதென்று ஆன்ற ஏதுவோடு அறிவுகாட்டி
> இடிக்குனர் இல்லை, உள்ளார் எண்ணியதெண்ணி உன்னை
> முடிக்குனர் என்றபோது முடிவன்றி முடிவதுண்டோ?

என்று சீதை கூறும் செம்மை சான்ற மொழிகள் அற நெறியின் பெருமையை நன்கறிவிப்பனவாம். புறப் பகையினும் அறப்பகையே கொடிதென்னும் அரசியல் உண்மை இலங்கைக் கதையில் அடிப்படையாய் இலங்கக் காணலாம்.

---

# எட்டிக்குப் போட்டி

(வி. ரா.)

ஆந்திர நாட்டில் புகழ்பெற்ற பிரபல நூலாசிரியராகிய ராஜ மகேந்திர புரம், சிலகமர்த்தி-லக்ஷ்மி நரசிம்மம் பந்துலுகாரு அவர்கள் "விநோதங்கள்" என்ற பெயரால் வெளியிட்டுள்ள புத்தகத்தைப் பெரும்பாலும் தழுவியும், எனது ஞாபகத்தில் உள்ள விஷயங்களை ஒழுங்கு படுத்தியும் "எட்டிக்குப் போட்டி" என்ற தலைப்பின் கீழ் பல ரஸமான விநோத விஷயங்கள் இனிமேல் மாதந்தோறும் என்னால் எழுதப்பட்டு வெளிவரும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். (வி. ரா.)

ஒரு கவிராயர் ஒருநாள் பெரிய இராமாயண எட்டுச்சுவடி ஒன்றைக் கையில் பிடித்துக்கொண்டு வழியில் போய்க்கொண்டிருந்தார். அப்போது ஒரு கவுண்டன் அவரைப்பார்த்து "ஐயா இன்றைக்கு என்ன யோகம்" என்று கேட்டான். அதற்கு அந்தக்கவிராயர் "நான் கவிபாடுகிறவனே யொழியப் பஞ்சாங்கம் சொல்லுகிறவன் அல்ல" என்று பதில் சொன்னார். "இவ்வளவு பெரிய எட்டைப் படித்திருக்கிற உனக்குப் பஞ்சாங்கம் சொல்லத் தெரியாதா?" என்று கவிராயரைப் பரிகாசம் செய்து விட்டுப் போனான். மறுநாள் அந்தக் கவுண்டன் கையில் பெரிய அரிவாளை ஏந்திக்கொண்டு வழியில் போக, நமது கவிராயர் அவனைச் சமீபித்து "ஐயா எனக்கு க்ஷவரம் செய்வாயா?" என்று கேட்டார். அந்தக் கவுண்டன் இந்தப் பேச்சைக்கேட்டு ஆச்சரியமும் ஆத்திரமுங் கொண்டு "என்னை நாவிதன் என்று நினைத்துக் கொண்டாயா?" என்று கேட்டான்; அதைக்கேட்ட கவிராயர் "கத்தியைப் பார்த்தால் பிரமாதமா யிருக்கிறது; மயிர் சிறைப்பதற்குங் கூட உதவாத இதனால் என்ன பிரயோஜனம்" என்று கேலி செய்துவிட்டுப் போனார்.



ஒருநாள் நமது கவிராயரை நாய் ஒன்று துரத்திக்கொண்டு வர, அவர் ஓட்டோட்டமாய் ஓடிவந்து தம் நண்பர்கள் உட்கார்ந்திருந்த இடத்திற்கு பெருமூச்சு விட்டுக்கொண்டு வந்து சேர்ந்தார். அப்போது ஸ்நேகிதர்கள்

அவரைப் பார்த்து "என்ன ஓய்! கழுதை மாதிரி இப்படி ஓடி வருகிறாய்" என்று கேட்டார்கள். "நாய்க்குப் பயந்து வந்தேன்; ஆனால் இப்போது கூட்டத்தில் நம் இனத்தோடு இனமாய்ச் சேர்ந்து விட்டேனாதலால் இனி மேல் அச்சம் தீர்ந்தது" என்று மறுமொழி கொடுத்தார்.

***

கல்வி இறுமாப்பினால் மண்டைக் கர்வம்கொண்ட ஒரு பண்டிதன் தனக்குத் தானே "பிரதிவாதி பயங்கரம்" என்று பட்டம் வைத்துக் கொண்டு, தன்னுடைய கல்வித்திறமையினால் 'யார் என்ன சொன்னாலும் அதை அல்ல என்று ஸ்தாபிப்பது" என்ற பிரதிக்கினை செய்து கொண்டு, ஒரு அரசனிடம் வந்து, அவனுடைய ஆஸ்தான பண்டிதரைத் தன்னோடு வாதுக்கு அழைத்தான். அதிசதுரரான சமஸ்தான பண்டிதர் வாதத்துக்கு ஒப்புக்கொண்டு புதிய பண்டிதனை நோக்கி "உம்முடைய பிரதிக்கினை என்ன?" என்று கேட்டார். அதற்கு அந்தப் புதுப்பண்டிதன் "தாங்கள் எந்த வார்த்தை சொன்னாலும் அந்த வார்த்தை பொய் என்று ருஜு கொடுப்பேன்; இதுதான் என் பிரதிக்கினை" என்றான். அதற்குச் சமஸ்தான வித்துவான் "நான் கூறுகிற இந்த இரண்டு விஷயங்களையும் பொய் என்று நிரூபியுங்கள்: அரசருடைய தாயார் மலடி அல்ல; அரசருடைய தேவி பதிவிரதை" என்றார். இந்த இரண்டு மொழிகளையுங் கேட்ட புதிய பண்டிதன் திடுக்கிட்டுப்போய் ஒன்றுந் தோன்றாமல், "அடுத்த நாளில் பதில் சொல்லுகிறேன்" என்று கூறி அப்போது தப்பித்துக்கொண்டு அந்த ராத்திரியே யாருக்குந் தெரியாமல் கம்பி நீட்டி விட்டான்.

***

ஒரு பிராமணன் தினந்தோறும் தன் மகனை அழைத்து "இந்த நேரம் சந்தியா வந்தனம் செய்தாயா, இல்லையா?" என்று கேட்டுக்கொண் டிருந்தான். மகனோ சாப்பாட்டின் மீது உள்ள சிரத்தை சந்தியாவந்தனத்தின் மீது இல்லாதவன். ஆகையால் சந்தியாவந்தனம் செய்தபோது செய்தேன் என்றும், செய்யாதபோது இல்லை என்றும் சொல்லாமல் பொய் சொல்லிக்கொண்டே வந்தான். ஒருநாள் சாயங்காலம் தந்தை மகனைப் பார்த்து "என்னடா அப்பனே இந்த நேரம் சந்தியாவந்தனம் செய்தாயா" என்று கேட்க, அவன் "செய்தேன்" என்றான். "எங்கே செய்தாய்" என்று தந்தை மறுபடியும் கேட்க "கீழ்புறக் குளத்தில்" என்று பதில் கொடுத்தான். அப்போது தந்தை "கீழ்புறக் குளத்தில் தண்ணீர் வற்றிப் போய் விட்டதே, அங்கே எப்படியடா செய்தாய்?" என்று கடாவ, "வாஸ்தவம்தான் அப்பா! நம்ம வண்ணான் அதில் தண்ணீர் இருக்கிறது என்று

சொன்னதிஞல் நான் சரிதான் என்று அங்கே போய்ச் செய்தேன்'' என்று மகன் பதில் சொன்ஞன்.

***

சந்தியாவந்தனம் மறந்து போன ஒரு பிள்ளையாண்டான் மறுபடியும் அதைத்தெரிந்து கொள்ளவேண்டும் என்று பக்தி சிரத்தையோடு தந்தையிடம் போய், "அப்பா! எனக்குச் சந்தியாவந்தனம் சொல்லிக்கொடுங்கள்" என்று கேட்டான். அந்த வார்த்தைகளைக்கேட்ட தகப்பன் கோபத்திஞல் எரிந்து விழுந்து மகனைப்பார்த்து இவ்விதம் கூறிஞன். "அடே மாடே! ஐந்து வருஷங்களுக்கு முன்பு கற்றுக்கொண்ட உனக்கே ஞாபகம் இல்லாதபோது, அறுபது வருஷங்களுக்கு முன்பு தெரிந்து கொண்ட எனக்கா ஞாபகம் இருக்கும்? இந்த மாதிரி வார்த்தைகளை இனிமேல் எப்போதாவது பேசிப்பார் சொல்லுகிறேன்'' என்று வெகு தாட்டியாகப் பதில் கொடுத்தான்.

***

ஒரு பிராமணன் ஒரு ஊருக்குப் போக எண்ணி, எத்தனை தடவை வீதி வாசலுக்கு வந்து பார்த்தாலும் கெட்ட சகுனமே ஆகிக்கொண்டிருந்தது. ஒரு தரம் எண்ணெய் விற்கும் செக்கான், இரண்டாந்தரம் விதவை, மூன்றும் தரம் ஒற்றைப் பிராமணன் எதிரில் வந்தமையால், அவன் இரண்டு மூன்று நாள் பயணத்தை நிறுத்தி, இரவில் எல்லாரும் தூங்கின பிறகு போவது நலம் என்று தீர்மானித்து, அப்படியே பயணமாகி, இருட்டில் இரண்டாவது ஜாமத்தில் வீதிக்குள் வந்தான். அந்த ஊர் நாவிதன் வீட்டில் இரண்டு பூனைகள் இருந்து கொண்டு அவனுக்கு மிகவும் உபத்திரவம் உண்டாக்கி வந்தமையால், அவன் அந்தப் பூனைகளை ஊருக்கு வெளியே கொண்டு போய் விட்டு விட எண்ணி, பகற்காலமாஞல் அடையாளங்கண்டு மறுபடியும் வந்து விடும், இருளில் அர்த்த ஜாமத்தில் கொண்டு போய் எறிந்து விடுதல் நல்லது என்று தீர்மானித்து, இரண்டு பூனைகளையும் பிடித்து கட்கத்தில் இடுக்கிக்கொண்டு, அந்தப்பிராமணன் வீதியில் வரும்போது எதிரே வந்து பேச்சுக்கொடுக்க ஆரம்பித்தான். சகுன பயங்கொண்ட அந்தப் பிராமணன், பேச்சுத்தொனியால் அவனை நாவிதன் என்று தெரிந்துகொண்டு "நீ எங்கே போகிருய்? என்று கேட்டான். நாவிதன் தான்போகும் காரியத்தைத் தெரிவிக்க, பிராமணன் கெட்ட சகுனம் ஆகிவிட்டதே என்ற துக்கத்தோடு "அப்பனே! என்காரியத்தைக் கெடுக்க, நீ ஒருவன் காணுதா இரண்டு பூனைகளுங் கூட வேணுமா?'' என்று சொல்லி விட்டு, கோபத்தோடு வீட்டுக்குப் போஞன்.




## வேதாந்த சூடாமணி வசனம்.

(தமிழ்ப் பண்டிதர் பூ. ஸ்ரீநிவாசன்.)

(இனி, பொருள்களினிருப்பை யறிந்து கொள்ளுதற் குரிய பிரமாணங் களைக் கூறுகின்றார்.)

"ஓர்பொரு ளறிந்து பெறற்குப், பொறியுறல் செய்காட்சியா மளவை முதலாகப் பொருந்து பிரமாணங்க ளெட்டுளவா மன்றே."

ஒரு பொருளினிருப்பை யறிந்து கொள்வதற்கு விஷயங்களிற் செல்லும் கண் முதலிய இந்திரியங்களா லறியப்படுகின்ற காட்சிப் பிரமாணம் (பிரத்தியக்ஷப் பிரமாணம்), அனுமானப் பிரமாணம், ஆகமப் பிரமாணம், அருத்தாபத்திப் பிரமாணம், உவமானப் பிரமாணம், அனுபலத்திப் பிரமாணம், சம்பவப் பிரமாணம், ஐதிகப் பிரமாணம் என எட்டுவகைப் பிரமாணங்களுள.

("பிரமைக்குக் காரணம் பிரமாணம். இதில் பிரமாணம் இலக்கியம்; பிரமாகரணத் தன்மை இலக்கணம்.

பிரமை—உண்மை யனுபவ ஞானம்; அஃதுண்டாதற்குச் சிறந்த காரணமா யிருப்பது பிரமாணமாம். எனவே, பிரமாண ஜன்னிய ஞானம் பிரமை யெனப்பட்டது. பிரமா என்பது பிரமை எனத் திரிந்து நின்றது. பிரமையை யுண்டுபண்ணுந் தன்மை பிரமாணத்திற் கிருத்தலின், அதுவே (பிரமாகரணத் தன்மையே) பிரமாணத்திற் கிலக்கணமாம்"—எனத் தர்க்க பரிபாஷை கூறுவ தறிக.)

அவ்வெண்வகைப் பிரமாணங்களுள்,

(1) காட்சிப் பிரமாணம் (பிரத்தியக்ஷப் பிரமாணம்).

"கடமுதலா மவற்றினது காண்கை யதுதானே காட்சி."

கடமுதலாகிய பொருள்களின் பிரத்தியக்ஷ ஞானத்திற்குச் சிறந்த காரணமாகவுள்ளவை நேத்திரம் (கண்) முதலிய இந்திரியங்களாம்.

ஆகவே நேத்திரம் முதலிய இந்திரியங்களே பிரத்தியக்ஷப் பிரமாணமாம்.

குடம் முதலாகிய பொருள்களை ஒருவன் கண்ணால் பார்த்து இது இன்ன பொருள் என்று அறிகிறான். அப்பொழுது கண்ணிந்திரியம் பிரமாணம்; கடம் பிரமேயம்; அதன் ஞானம் பிரமை. ஆகவே, பிரத்தியக்ஷப் பிரமையின் கரணம் பிரத்தியக்ஷப் பிரமாணமாமென வறிக. பிறவற்றிற்கும் இவ்வாறே காண்க.

(2) அனுமானப் பிரமாணம்.

"புகையாலங்கி ஞானமனுமானம்."

புகையைக் கண்டவிடத்து நெருப்புண்டென்றறிதல் அனுமானப் பிரமாணமாம்.

ஒருவன் வெகு தூரத்தில் புகையெழக் காண்கிறான். அந்த ஞானத்தால் அவ்விடத்தில் நெருப்பிருக்கின்றதென்னும் ஞானம் அவனுக் குண்டாகின்றது. ஆகவே அந்தப்புகை ஞானம் அனுமானப் பிரமாணமாம். இந்த அனுமானப் பிரமாணம் பிரதிஞ்ஞை, எது, திருஷ்டாந்தம் என்னும் மூன்று அங்கங்களையுடையதா யிருக்கும். அவற்றுள்,

(1) பிரதிஞ்ஞை:—

"இம்மலை வெவ் வழலுடைத் தென்பது."

இம்மலை நெருப்புடையது என்பது பிரதிஞ்ஞையாம்.

(2) எது:—

"புகை யுண்மையினு லென வேது."

புகையை யுடைத்தா யிருத்தலால் என்பது எதுவாம்.

(3) திருட்டாந்தம்:—

"மடைப்பளிபோ லென்பது திட்டாந்தம்."

சமைய லறைபோல என்பது திருஷ்டாந்தமாம்.

(3) ஆகமப் பிரமாணம்.

"உடைமை யுணராத்தனுரை யால்நதிதீராதி யுறுகனியாதிக ளுண்மை ஞானமா கமமாம்."

நதிதீரம் முதலிய விடங்களில் கனி முதலிய பொருள்களிருப்பதை யறிந்துவந்து கூறுகிற உண்மை பேசுவோனுகிய ஒருவனுடைய வார்த்தையால், நதிதீர முதலிய விடங்களில் கனி முதலிய பொருள்களுள்ளனவென்று ஒருவன் உணர்கிறான். அவ்வாறுணர்தற்குக் காரணம் ஆப்தன் (உண்மையுரைப்போன்) வாக்கியம். ஆகலின், அது (வாக்கியம்) ஆகமப் (சப்தப்) பிரமாணமாம்.

(4) அருத்தாபத்திப் பிரமாணம்:—பொருளின் கற்பனையாம். அது, காட்சி யருத்தாபத்தி கேள்வி யருத்தாபத்தி என இருவகைப்பட்டு நிற்கும். இவை முறையே திருஷ்டாருத்தாபத்தி, சுருதாருத்தாபத்தி எனவும்படும். அவற்றுள்,

(1) காட்சி யருத்தாபத்தி.

"பகற்பொழு துண்ணுனொருவன் இளையாமை கண்டு பரிந்திரவூண் கற்பித்தல் காணருத்தாபத்தி."

பகற்காலத்தில் உணவுட்கொள்ளாத ஒருவனுடைய உடல் உணவின்மையால் இளைத்துப்போக வேண்டியிருக்க அங்ஙன மிளையாமல் பருத்திருப்பதைப் பார்த்து, 'இவன் பகற்பொழுதில் உண்ணுமலிருப்பினும் இரவிலுண்பாஞக வேண்டும். இன்றேல் உடல் இளையாமலிருக்க முடியாது' என இரவுண்டலைக் கற்பித்தல் காட்சி யருத்தாபத்தியாம்.

(2) கேள்வியருத்தாபத்தி.

"அகத்தினிலை யறுதேவ தத்தனெனிலிருப்ப னவன்வேறோ ரிடத்தி லெனத் தெரிந்திடுதல்."

ஒருவன் தேவதத்தனென்பானது வீட்டிற்குச் சென்று 'தேவதத்தன் இருக்கின்றானே?' எனக் கேட்டான். ஆண்டிருந்தா னொருவன் 'தேவ

தத்தன் வீட்டிலில்லை' யென்றான். அந்த வார்த்தையால் 'தேவதத்தன் வேறோரிடத்திலிருப்பான். அவன் ஜீவனோபாயத்தொழில் ஆண்டு நிகழ்தல் வேண்டும்' என்று ஆராய்ந்து கற்பிக்கிறான். அவ்வாறு கற்பித்தல் கேள்வி யருத்தாபத்தியாம்.

(5) உவமானப் பிரமாணம்.

"தருபசுவோ டொக்குமரை யெனுமொழிகேட் டிருந்தோன், புகப்படரும் வனத்திலதன் விடயஞானத்தால் பொருந்துதலே யுவமானப் பிரமாணமாகும்."

ஆமா (காட்டுப்பசு)வைக் கண்டறியாதானொருவன் பிறனைப் பார்த்து ஆமா எப்படி யிருக்கும் எனக் கேட்டபோது, அவன் ஆமா ஆ (பசு)வைப் போலிருக்கும் எனக் கூறினான். பிறகு அவன் ஒருநாள் காட்டிற் சென்ற போது ஓர் ஆமாவைக் கண்டு அது ஆவோடு ஒப்புமைப்பட்டிருத்தலால் ஆவிற்கும் ஆமாவிற்கும் உள்ள ஒப்புமை ஞானத்தால் விஷய ஞானத்தை யடைகிறான். அவ்வாறு ஒப்புமை ஞானத்தால் விஷய ஞானத்தை யடைவது உவமானப் பிரமாணமாம்.

(6) அனுபலத்திப் பிரமாணம்.

"இந்நிலனிற் கடமில்லை யென்பதனாற் றோன்று மின்மை யுணர் வபாவமாம்."

ஒருவன் ஓரிடத்திற் சென்று குடமிருக்கிறதா வென்று பார்க்கிறான். அங்குக் குடமின்மையால் இங்குக் குடமில்லை என்னும் ஞானமுண்டாகின்றது. அந்த ஞானத்திற்குக் காரணம் குடத்தின் அபாவமாம் (இன்மையாம்.) அந்த அபாவம் அனுபலத்திப் பிரமாணமாம். (அநுபலத்தி—விளங்காமை.)

(7) சம்பவப் பிரமாணம்.

"ஆயிரமாகிய வெண், தன்னிலொரு நூறெனு மெண் ணுண்டெனு ஞானந்தான் சம்பவமாம்."

ஆயிரமென்னு மெண்ணில் நூறு என்னு மெண் உண்டு என்னும் ஞானம் சம்பவப் பிரமாணமாம்.

(8) ஐதிகப் பிரமாணம்.

"இம் மரத்திலியக்கனுள னென்னுஞ், சொல் நிகழ்வில் வருமியக்க விடய வுணர்வதனைச் சொற்றிடுவ ரறிஞ ரைதிக மென்ன."

ஓர் ஊரில் வசிக்கும் ஜனங்கள் ஓர் மரத்தைக் குறிப்பிட்டு இம்மரத்தில் இயக்கன் இருக்கிறான் எனக் கூறுகின்றனர். அதனைச் செவியுற்ற வொருவனுக்கு அவ்வார்த்தையால் இம் மரத்தில் இயக்கனிருக்கிறான் என்னும் விஷயத்தின் ஞான முண்டாகின்றது. ஆகவே அந்த வார்த்தை ஐதிகப் பிரமாணமாம்.

மேற்கூறப்பட்ட எண்வகைப் பிரமாணங்களுள் யார் யார் எவ்வெப் பிரமாணத்தை யங்கீகரிப்பர் எனக் கூறுகின்றார். (எல்லோரும் எல்லாப் பிரமாணங்களையும் அங்கீகரிப்பதின்று. சிலர் எல்லாவற்றையும் அங்கீகரிப்பர். சிலர் சிலவற்றை மாத்திரமே அங்கீகரிப்பர்.)

உலகாயதர் காட்சிப் பிரமாண மொன்றையே அங்கீகரிப்பர். (கடவுள் ஆன்மா முதலியவை இல்லை யென்றும், தேகமே ஆன்மா, போகமே மோட்

சம் எனவும் கூறுவோர் உலகாயதர் எனப்படுவர்.) சைனர் புத்தர் வைசேடிகர் என்னுமிவர்கள் காட்சிப் பிரமாணத்தோடு அனுமானப் பிரமாணத்தையு மங்கீகரிப்பர். சாங்கியர் அவ்விரண்டுடன் சப்தப் பிரமாணத்தையு மங்கீகரிப்பர். நையாயிகர் மேற்கூறிய மூன்று பிரமாணங்களுடன் உவமானப்பிரமாண மொன்றையு மங்கீகரிப்பர். பிரபாகரர்க்கு அந்நான்கினோடு அருத்தாபத்திப் பிரமாணமும் அங்கீகாரமாம்; பாட்டருக்கும் வேதாந்திகளுக்கும் மேற் கூறப்பட்ட ஐந்தோடு அனுபலத்திப் பிரமாணமும் உடன்பாடாம். பௌராணிகர் எண்வகைப் பிரமாணங்களையு மங்கீகரிப்பர்.

## திருக்கு திருசியம்.

வேதாந்த நூல்களெல்லாம் திருக்கு திருசியங்களைப் பற்றியே கூறுவனவாம் (திருக்கு=அறிவு. திருசியம் அறியப்படு பொருள்.) அவற்றுள்.

## திருக்கு

திருக்கானது சுவகதம் சஜாதீயம் விஜாதீயம் என்னும் மூவகைப் பேதங்களு மற்றதாம். அம் மூவகைப் பேதங்களுக்கும் உதாரணம் கூறுமிடத்து,

(1) சுவகத பேதம்:—ஒரு மரத்திற்கும் அதன் அவயவமாகிய கிளைபூ காய் இலை முதலியவற்றிற்கு முள்ள பேதம் சுவகதபேதமாம்.

(2) சஜாதீய பேதம்:— ஒரு மரத்திற்கும் மற்றொரு மரத்திற்கு முள்ள பேதம் சஜாதீய பேதமாம்.

(3) விஜாதீய பேதம்:—ஒரு மரத்திற்கும் அதனின் வேறு ஜாதியாகிய கல் முதலியவற்றிற்கு முள்ள பேதம் விஜாதீய பேதமாம்.

திருக்கு அதாவது சச்சிதானந்த வடிவ சிவம் இம் மூவகைப் பேதங்களு மற்றது. பிரஹ்மம் (திருக்கு) நிரவயமாயிருத்தலின் சுவகத பேதமும் அதின் வேறாக ஓர் சத்துப் பொருளில்லாமையின் சஜாதீய பேதமும் இல்லையென்பதொக்கும். ஆனால் இவ்வுலகத்திற்குக் காரணமாயுள்ள மாயை யொன்றிருக்கின்றதே. பிரஹ்மத்தினும் வேறாகிய மாயை யிருப்பது விஜாதீய பேதமாமன்றோ? அங்ஙனமாக, திருக்கு விஜாதீய பேத மற்றதெனக் கூறுவது எவ்வாறு பொருந்தும்? எனின்:—

உண்மையே. மாயை தனியான ஓர் பொருளா யிருக்குமாயின் அங்ஙனம் கூறலாம். அங்ஙன மின்றே. ஓர் சித்திரக்காரனிடத்தி லுள்ள சித்திரமெழுதும் சக்தியானது, அச் சித்திரக்காரனை விட வேறாக வுள்ளதோ? இல்லை யன்றோ! அவ்வாறே, உலகத்திற்குக் காரணமாக வுள்ள மாயையும் சத்ரூபப் பிரஹ்மத்தினும் வேறாக விளங்காமையின் சச்சிதானந்த சிவத்திற்கு விஜாதி பேதமுமில்லையாம். இக்கருத்தைக் கொண்டே சுருதியும் "ஏகமேவாத் துவிதீயம்" எனக் கூறுகின்றது. இவ் வாக்கியத்தில், "ஏகம்" என்னும் பதத்திற்குப் பொருள் "ஜீவப் பிரஹ்மைக்கியமாம்." "ஏவ" என்பதற்குப் பொருள் "நிச்சயமாம்." "அத்துவிதம்" என்னும் மொழிக்கு "துவைதவிளக்கம்." ஆகவே, மாயா கற்பனைகளைக் கடந்து நிரவயவமாய் எக் காலத்தும் திரித மில்லாததாயுள்ள பிரஹ்மத்திற்குச் சுவகத பேதம் சஜாதீய பேதம் விஜாதீய பேதம் என்னும் மூவகைப் பேதமு மில்லையாம் என்பது தெளிவாம்.

# விக்கிரக ஆராதனை

(வீரவநல்லூர். எஸ். நல்லமுத்துப் பிள்ளை)

ஆதி மத்தியாந்த ரகிதராகிய எல்லாம் வல்ல இறைவன் பெருமையைப் பிரகாசிக்கச் செய்யும் இப் பிரபஞ்சத்தில் கடவுள் தன்மை வாய்ந்த மகரிஷிகள் பிறந்த நாடாகவுள்ள இந்தப் பரத கண்டத்தின் கண்ணே வசித்துவரும் இந்துக்களின் முக்காலமுமுணர்ந்த ஞானிகள் கருத்தின்படி அமைந்த மத நூற்களும், அவற்றிலடங்கிய கருமானுஷ்டானங்களும், பல் சமயத்தவர், கடவுளுக்கு, "ஒரு நாமம் ஒருருவமொன்று மிலார்க் காயிரந் திருநாமம் பாடி" என்கிறபடி பல நாம ரூபங்களைக் கற்பித்துப் பூசித்து வந்தாலும், அவ்வழிபாடுகள் உலகெலாம் போற்றுமோ ரொப்பற்ற பரம்பொருளாகிய அக் கடவுளையே நாடிச் செல்கின்றன வென்பது வெள்ளிடைமலைபோல் விளங்கும்.

ஆனால் தற்போதுள்ள சமூக சீர்திருத்தஞ் செய்பவர்கள் தாங்கொண்ட கருத்துக்களை வெளி காட்டி விக்கிரகாராதனை அவசியமில்லை யென்றும், புராண இதிகாசங்கள் வெறுமாபாசக் கதைகளென்றும், இந்துக்கள் ஆராதித்துவரும் விக்கிரகாராதனை அநேக விதமான தெய்வங்களை உண்டுபண்ணி வழிபடுவதாகிற தென்றுங் குறை கூறுவர். ஆழ்ந்து நோக்கி ஆராயுமிடத்து, உள்ளாகவோ புறம்பாகவோ அத்தகைய ஆராதனை ஆஸ்திகர்களனைவர்க்கும் உடன் பாடாகின்றது.

"யாதொரு தெய்வங் கொண்டீரத் தெய்வமாகியாங்கே
மாதொரு பாகனார் தாம் வருவர்."

என்று பெரியோர் கூறுவதும் நோக்கத்தக்கது.

கடவுளை வழிபடு மார்க்கங்கள் பல உள. என்றாலும், அவை சரியை, கிரியை, யோகம், ஞானமென்ற இந்நான்கினு ளடங்கும். இதனை,

" அங்க சுத்தியு மாலயந்தொழுவதுஞ் சரியை
மங்கனத் துடனட்ட மாசித்தியும் வரையுஞ் சக்கரபூசை,
பொங்கமானது கிரியையாம் வாயுவைப் புரண்டிடா திழுத்திட்டு,
தங்கி நின்றதோர் யோகமென்றிதனையே சாற்றிடு மறைதானே."
" ஞானமேதெனக் கேட்டிடின் தத்துவ நானென வுணர்ந்திந்த,
ஊனை நானென வுரைத்ததை யகன்று பின்னெறி வரத்
[தனைக் கண்டு,
மானம் வெட்கமுந் துக்கமுங் கவலையும் வஞ்சனை தான் போக்கி
யீனமற்று நான் சிவமெனத் துணிந்தது மிழந்தது முடிவாமே."

என்பவற்று லறியலாம். சரியை, கிரியை யென்பவை பக்திமார்க்கத்திலடங்

கும். யோக, ஞான மார்க்கங்கள் சாமானிய அறிவுடையவர்கள் சாதித்துக் கொள்ளத் தக்கவையல்ல வென்பது எவருமே அறிவர். பக்தியால் வேண்டிய பயனெய்த லெளிதாகு மென்பது ஆன்றோர் கருத்து. எண் குணத்தவனை கடவுளை யாதாமோருபாசனை மூர்த்தியாக் கொண்டு பெரியவர்களா லறிவுறுத்திய நாம ரூபத்தினை மனதினால் சங்கற்பித்து மனதை யிந்திரிய விஷயங்களிற் செல்லவிடாமற் றனது லக்ஷியத்தில் நிறுத்தி என்பெலாம் நெக்குருக ரோமஞ் சிலிர்ப்ப உடலினக மனதழலின் மெழுகாம்படி துதித்துப் பாடியும், தாமனுபவித்து வரும் பொருள்களை அன்பால் நித்திய, நைமித்திய கர்மங்களால் அம்மூர்த்திக் கர்ப்பணஞ்செய்தும் வழிபட்டு வருவது பக்தி மார்க்கம்.

" நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே
புக்கு நிற்பன் பொன்னார் சடைப் புண்ணியன்."

என்பதும் காண்க. பக்த வத்சலரான கபீர்தாசரென்ற வோர் சிரேஷ்டர் சாப்பிடுவதற்காகத் தாம் வைத்திருந்த ரொட்டியைத் தாழே வைத்துவிட்டு வெண்ணெ யெடுக்கச் சென்ற சமயம் பார்த்து ஓர் நாய் அந்த ரொட்டியைக் கௌவிக்கொண்டு செல்வதைப் பார்த்தார். உடனே அவர் அந்நாயின் பின்னோடி வெண்ணெயையுங்கூட வைத்துத் தின்றால் நிரம்பவும் ருசிகரமாக விருக்குமென்று மிகவும் வேண்டிக்கொண்டாராம்.

இதனால், செகத்திடமாகத் தோன்றும் சர்வ சிருஷ்டியும் பிரஹ்ம மய மாகவே அவருக்குத் தோன்றியது. "கல்லினுஞ் செம்பிலும் கடவுளில்லை" எனப் புகலும் நண்பர்களின் கருத்து ஆராயத்தக்கது. கல்லிலுஞ் செம்பிலுங் கடவுளை அறிதற்கூடும் விதமெவ்வா றெனில், அறம், அன்பு, நீதி முதலியன ஊனப் புலன்களுக்குப் பொருளாகாது அறவோன் வழி அறமும், அன்பன் வழி யன்பும், நீதிமான்வழி நீதியும், உணர்விற் படுதல் போல, மக்களுள்ளம் கடவுளிடத்தே படியும்போது கடவுள் உட்பொருளும், விக்கிரகங்கள் உருவெளியாய்த் தோன்றுமில் பொருளுமெனப் புலனாவதாலென்க. ஆனது பற்றி உள்ளுணர்வா லமையுந் தன்மை விக்கிரக ரூபேண வோர் உட்பொருளைக் காண முடியுமென்ப தென துள்ளக்கிடக்கை.

மக்கட்கு இயற்கையாகவே தோன்று மூலக வின்ப நுகர்ச்சியையே பெரிதாகக் கொண்டவர்கள் பழித்தற்கிடமான தீய வழிகளினாலுண்டாகு மிலாபத்தையே கண் கூடானதென்று களிப்பர். இந்த இலாபம் முதற்கண் ஆக்கம்போற் றோன்றினும், செல்வம், சந்தானம், சுற்றம் முதலிய ஐசுவரியங்கள், தாம் கேடுற்ற பொழுது தமக்குத் துணையாவதற் கேதுவாகாமை பற்றியும், பலவகைத் துன்பங்கட் கிடமாமென்பது பற்றியும், உயிரினும் வேறான உடம்புக்குண்டாகு மிழிவை நினைந்து, அவ்வுடம்பு நீங்கா முன்னமே தவத்தைச்செய்து நித்தியமான கடவுளடியைக் கூடி அழிவில்லாப் பேரின்ப வாழ்வில் வாழ அவர்கள் முயலவேண்டும். அத்தன்மையவர்களுக்கே பெரியவர்

களாலருளிச் செய்யப்பெற்று தத்துவோபதேச (ஞான) நூற்கள் பயன்படுமே தவிர ஏனையவர்களுக்கு அவை பயன் படா.

உலகிற் பிடிவாதத்துடன் பல போக்காக வாழு மறிவுடையவர்களை யொரே திற முடையவர்களாக ஆக்க முயல்வது கூடாத காரியம். அது போலவே இந்த சமூகத்தி னிடையமையப்பெற்ற நூற்கள் பல உள. அன்றியும் கல்வியிற்றேர்ந்தவர்கள் தமது அறிவிற் கெட்டியவாறு, கர்மம், பக்தி, யோகம், ஞானமென்றவைகளுக் கேற்றவாறுள்ள நூற்கள் பல வரைந்துள்ளார்கள். இந்நான்கு பிரிவினைகளில் தாம் மேற்கொண்ட நெறியினை, சுருதி, யுக்தி, அனுபவங்களாலாராய்ந்து, பொருந்த ஒழுகுதல் நன்றாம்.

கர்ம காண்டத்திற் கேதுவாகிய நூற்கள், யோக மார்க்கத்தையோ, ஞான மார்க்கத்தையோ அனுஷ்டித்து (பயின்று) வருபவர்கட்கு அனாவசியமாயினும், ஒன்றோடொன்று தொடர்புடைத்தா யிருக்கிறதென்பது நிச்சயம். கோவில்களில் நடைபெறுஞ் சில நடபடிக்கைகள், அதாவது, அம்மன் சுவாமிக்குப் பள்ளியறை யலங்கரித்துப் படுக்கவைத்தல், தாசியாடுதல், சுவாமி பரத்தமைத் தொழிலிலிறங்கியதாக உள்ள பல திருவிழாக்கள், சில ஜாதியார் கோவிலுக்குள் வரலாகாதென்பது முதலியன, சிலர் தந்நலங் கருதித் தம் சிற்றறிவிற் கெட்டிய உணர்வை அடிப்படையாகக் கொண்டு சாஸ்திரங்களினிடையே பல குப்பைகள் புகுத்தி வைத்ததோர் முரண்பாடாகுமென்பர் சிலர். இவைகள் பழங்காலத்துப் பெரியவர்களா லேற்படுத்தப்பட்டாலும், தற்காலத்துக் கேற்ற பழக்க வழக்கத்தை ஒட்டிச் சீர்திருத்தங்கள் பெற்றுச் சமூகத்தினிடையே வந்தாலொழிய நாம் ஒற்றுமையுடன் கூடி வாழமுடியாது.

"பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே."

என்னும் விதி இச்சீர்திருத்தங்களுக் கனுகூலமா மென்க.

கடவுளுக்கு மனைவி மக்களிருப்பதாகவும், அவர் பல திருவிளையாடல்கள் நடத்தினரென்றும், புராண கதைகளா லறிகிறோம். ஒரு வஸ்து இருந்தால் அதற்கு உணர்ச்சி, வல்லமை என்று சொல்லப்படுகிற ஒரு வித சத்து இருந்தே தீரும். சக்தி யில்லாமல் எப்பொருளு மிரா. திருஷ்டாந்தமாக:—ஒரு விருக்ஷம் பட்டழிந்து போயின பின் பார்த்தால் அதற்குள்ள நிலைமையும் அது தன் சக்தியோடு கூடியிருக்கிறபொழுது, அசைதல் நிழல் தரல், பூத்தல், காய்த்தல், கனிதரல் முதலிய தொழில்கள் செய்வதையும் நாம் அறிகிறோம். அதுபோல:—நின்மல, நிராமய, நித்திய, நிர்க்குண, நிர்த்தொந்த, நிர்விகார, நியதியாயிருக்கும் கடவுள் ஸ்வபேத மென்றுகூறத் தமாயிந்த அகிலமாகியும், விசித்திரமாகியும் விளங்குவதற்காதாரமாகி தம்மிடத்தெழுந்த உணர்ச்சி, அல்லது வல்லமையாகிய சக்தி உடைத்தாயிருத்தலைக் காண்கிறோம். அச்சக்தி அக்கினியிற் சூடுபோ லபின்னமாகியுமுள்ளது. இப்படி நானாவித நாமரூபங்களாய் வியாபித்து விளங்கும், பூதம், பூதபௌதிகம், பூதாத்மிகம் முதலிய எல்லாம் மண்ணினின்றெழுந்து மண்ணிலேயே முடிவிலடங்குவது போல, கடவுளிடத்திலேயே எல்லாம் அடக்கமாகின்றது.

விருக்ஷம் தன்னிடத்தில் அபேதமாயுள்ள சக்தியைக்கொண்டு பூத்தல் காய்த்தல் முதலிய கிரியைகளையுஞ் சந்ததிகளையு முண்டாக்கிக் கொள்ளு

கிறதே யல்லாமல் ஒருமர மின்னொரு மரத்தைப் புணர்ந்தல்ல வென்பர் பலர். அதுபோல புராணங்களிற் கூறும் கடவுளும் வேறேவோர் பெண்ணைப் புணர்ந்து உலகத்தைப் படைத்த தல்லவென்றும் பேசுவர் சிலர். முடிவாய் நோக்குமிடத்து,

"எவ்வுயிரும் பராபரன் சந்நிதியே யாகும்
இலங்குமுயி ருடலனைத்து மீசன் கோயில்."

என்பதே என் கொள்கை.

---

குறிப்பு:—இந்த வியாசத்தில் கல்-செம்பு இவற்றில் எங்கும் நிறைந்த கடவுள் இல்லை யென்று சிலர் சொல்வதாகப் பிரஸ்தாபித்து, சமாதானமும் ஒருவாறு பேசப்பட்டுள்ளது. பட்டினத்தடிகள் "கல்லினும் செம்பினுமோ விருப்பானெங்கள் கண்ணுதலே" என்றும், "உளியிட்ட கல், புளியிட்ட செம்பு"—இவற்றை அனுசரிப்போம் என்றும் பேசி யிருக்கின்றார். இவ்வாறு பேசிய இவரே பல சிவஸ்தலங்கள் தோறும் சென்று விக்கிரகாராதனை செய்திருக்கின்றார். ஆஸ்திகத் திருவாளர்கள் இத்தகைய வாக்கியங்களுக்கு வேதாகம சாஸ்த்ரோக்தமான சமாதானங்களை யுக்தி அனுபவங்களுக்கிசைய எடுத்துக்காட்டி, கடவுள் உண்டு என்பதையும், விக்கிரகாராதனை ஆஸ்திகரனைவர்க்கும் (கடவுளைக் கோயில்களிற் சென்றோ அல்லது மானஸிகமாகவோ வழிபடினும்) ஒருவாறு ஏற்பட்டுவிடுகிற தென்பதையும் நிரூபிக்கின்றனர். ஆயினும் மேல் நோக்காகப் பார்ப்போமானால், அன்பர்களின் தூய்மையான மனக்கோயிலில் கடவுள் விளங்குவதுபோல ஏனையோரின் மாசு படிந்த மனக்கோயிலில் விளங்குவதில்லை என்பதை வெளிப்படுத்தவே பட்டணத்தார் கல்லையும் செம்பையும் பிரயோகித்துள்ளார் என்பது விளங்கும். கல் எத்தனைநாள் நீரிலிருந்தபோதிலும் ஈரம் பற்றுவதில்லை. அதுபோல மாசுள்ள மனத்தார் எத்தனை நாள் சாது ஜனங்களுடன் பழகினும் ஸ்திரமான கடவுள் நம்பகத்தைக் கொள்ளமாட்டார்கள் என்பதற்கு அவர்களைக் கல்லுக்குவமித்தார். செம்பைத் துலக்கக் களிம்புப் பற்றினின்றும் அது நீங்கியதுபோல் சிறிதுநாள் காட்டி மீண்டும் களிம்பை யடைகின்றது. அதனை யொப்ப, மாசுள்ளோர் சற்சங்கத்தால் நல்லுணர்வு பெற்றாலும், புராண பிரசவ மசான வைராக்கியத்தை அனுசரித்து மீண்டுந் தம் துர்ச்சங்க பழக்கத்தையே கைக்கொள்வர். ஆதலின் அவர்களிடம் கடவுள் பிரகாசிப்பதில்லை. ஆகவே, "கல்லினும் செம்பினுமோ விருப்பான் எங்கள் கண்ணுதலே" என்றார் என்க. கடவுள் விஷயமாக வெளியுலாவும் 'உண்டு—இல்லை' என்கிற இருபதங்களும் குணமாக முடிதலின் குணியின்றிக் குணப் பிரஸ்தாபம் எங்ஙனம் வரும்? இவற்றால் கடவுள் உருவமாகவும் அருவமாகவும் இருக்கிறார் என்றே ஏற்படவில்லையா? பெரியாரும்,

"உளன் எனில் உளன் அவன் உருவம் இவ்வுருவுகள்
உளன் அலன் எனில் அவன் அருவம் இவ்வருவுகள்
உளன் என இலன் என இவை குணம் உடைமையில்
உளன் இரு தகைமையோ டொழிவிலன் பரந்தே"

என்று பணித்துள்ளார். "பத்திராதிபர்"

# அறம்.

ச. சேது-சுப்பிரமணியன்.

அறமென்பது செய்யத்தக்கவை இன்னவை தவிர்க்கத்தக்கவை இன்னவை என்று அறிவுடையோர்களால் வரையறுத்து விதிக்கப்பட்டவற்றை அனுசரிக்கும் ஒழுக்கமேயாம். அது மக்களுக்கு மேன்மையைத் தருவதொன்றாயிருத்தலின் அதனை அவர்கள் தம் உயிரினும் மேற்பட்டதாக எண்ணிப் பரிபாலிக்க வேண்டும்.

நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க
மென்று மிடும்பை தரும்.

என்ற குறளுக்குப் பரிமேலழகர் கொண்ட கருத்தின் சாரமாவது ஒருவனுக்கு நல்லொழுக்கம் புண்ணியத்திற்குக் காரணமாய் இருமையினும் இன்பம் பயக்கும்; தீயவொழுக்கம் பாவத்திற்குக் காரணமாய் இருமையினுந் துன்பம் பயக்கும் என்பதே. நாம் பிழைக்குரியவ ராதலால் நல்லொழுக்கத்தில் எப்போதும் விழிப்பா யிருத்தல் வேண்டும். அவ்வாறிருந்து செய்து வரும் அறச் செயல்களுக்கு மனத்தூய்மை அதி முக்கியம். தூர் ஆசை, தீராக்கோபம், பொறாமை-இவை முதலிய கெட்ட குணங்களை முற்றும் ஒழிக்க முயலுதல் வேண்டும்.

அன்பு, அருள், அடக்கம், பெரியார் சிறியார்க்கினிதாக நடந்து கொள்ள வேண்டிய முறைமை, ஆடம்பர மின்மை, பரோபகாரம் முதலிய நற்குணங்களைக் கடைப்பிடித்தல் வேண்டும்.

இத்தன்மைகளோடு செய்யத்தக்க அறத்தைத் தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனர் இல்லறம் துறவறம் என இரண்டு பகுதியனவாகப் பிரித்து நமக்கு உபதேசிக்கிறார். அவர் இல்லற வியலின் ஈற்றயலிற்கூறிய ஈகையையே ஔவையார் எடுத்துக்கொண்டு,

ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றுங்
காத லிருவர் கருத்தொருமித்து—ஆதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு.

என்ற வெண்பாவினால் தெரிவிக்கிறார்.

இனி, பொதுவாக வறியவர்களுக்கு அன்னசாலை வைத்தல் முதலியனவாக அறத்தை முப்பத்திரண்டு விதமாய் ஆன்றோர்கள் வகுத்துள்ளார்கள். இறைவன் காஞ்சிபுரத்தின் கண் உமாதேவியாரிடம் முப்பத்திரண்டு

அறத்தையும் உலகமறிய வளர்த்துக் காட்டுவாய் என அருள, அவ்வம்மை யார் அவ்வாறே அந்த அறங்களை வளர்த்த படியால் அம்மாதேவியாருக்கு அறம் வளர்த்தமாதா எனத் திருநாமமுள்ளதாக ஆன்றோர்கள் கூறுவர். இதனை,

முட்டையிற் கருவில் வித்தினில் வியர்ப்பில்
நிற்பன நெளிவ தத்துவ தவழ்வ
நடப்பன கிடப்பன பறப்பன வாகக்
கண்ணகன் ஞாலத் தெண்ணில்பல் கோடி
பிள்ளைகள் பெற்ற பெருமனைக் கிழத்திக்கு
நெல்லிரு நாழி நிறையக் கொடுத்தாங்
கெண்ணான் கறமு மியற்றுதி நீயென
வள்ளன்மை செலுத்து மொண்ணிதிச் செல்வ.

எனவரும் குமரகுருபர சுவாமிகளின் திருவாக்கானு முணர்க.

திருமூலர் அன்னதானமே மிக வுயர் வுடையது என்றார்.

பொதுவாக உடம்பு சௌகரியமாக இருத்தற்குரிய பசி தீர்த்தல் முதலிய அறங்களினும் கல்வி யறிவு சிறந்த அறமாகும்.

உலகத்திலே பொருள் சம்பாதித்து இம்மைப் பயனை அனுபவித்தற்கு ஏதுவான கல்வி யறிவினும் உயிரானது நிலைபெற்ற சுக வாழ்க்கையைப் பெறுதற்குரிய மெய்ஞ்ஞான நூல்களைக் கற்றலே சிறந்த அறம்.

எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பானகு—மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்.

என்ற வெண்பாவினால் ஒவ்வொருவனும் அற நூலுணர்ச்சிக்குச் சாதனமான நூல்களையே கற்பதுடன் யாவரையும் கற்கும்படி செய்தும் யாவர்க்கும் கற்றுவிப்பதுவுமே மிக்க மேலான அற மாகும்.

———(o)———

வீட்டுச் சொந்தக்காரி:—நாம் ஒருவிஷயத்தை எப்போதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேணும்—நாம் மற்றவர்களுக்கு உபகாரம் செய்யவே இங்கே இருக்கிறோம்.

ஒருவன்:—“உண்மைதான் அம்மா! மற்றவர்கள் எதற்காக இங்கே இருக்கிறார்கள்?”

# வம்புச் சண்டை

பண்டித. வி. ராமசாமி

திம்மப்பனோடு தெருவில் போவது சனியனை விலைக்கு வாங்கின மாதிரி. மனுஷன் அவ்வளவு கெட்டிக்காரன் அல்ல. ஆனால் அரை நாழிகை சும்மா இருக்க மாட்டான். எங்கே போனாலும் வம்புச் சண்டை இழுத்துக் கொண்டே இருப்பான். எதையும் சாமானியத்தில் விடமாட்டான். அவனிடத்தில் அமைந்திருக்கிற பெரிய குறை என்ன வென்றால், உலகத்தில் தன்னைப் போன்ற குசாக்கிர புத்திவாய்ந்தவர்கள் யாரும் இல்லை என்பதே. "இவர்களுக்கு என்னளவு அறிவும் இல்லையே, ஏன்?" என்று எண்ணிக்கொண் டிருக்கிறான். ஆனால் பாவம் அவனது மனதில் மாத்திரம் அணுவளவும் கெட்ட எண்ணம் கிடையாது. முன் பின் பார்க்க மாட்டான்; வம்பு, விவகாரம், வழக்கு என்றால் அவனுக்கு வெகு ருசி. விஷயம் என்னமோ உண்மையா யிருக்கும் மொழிய பேச்சில் ரஸம் இருக்காது.

திம்மப்பனும் நானும் சேர்ந்து ஒரு நாள் காபி கிளப்புக்குப் போக நேர்ந்தது. ஊருக்குள்ளே கோமாளி ஐயர் கிளப் மிகவும் பேர்போனது—மிகவும் பெரியதுங் கூட. எப்போது பார்த்தாலும் அங்கு ஜன நெருக்கம் அதிகம். வருகின்றவர்களுக்குச் சப்ளை செய்யவும், சுத்தம் செய்யவும் பிராமணர்களும் மலையாளிகளுமாக வேலைக்காரர் அநேகம் பேர் இருக்கின்றனர். கிளப்பில் மேஜைகளும், நாற்காலிகளும், பெஞ்சுகளும் மிகவும் சுத்தமாகவும் ஒழுங்காகவும் வைக்கப்பட் டிருக்கின்றன. உட்காருவதற்கு வெகு ரம்மிய மாக இருக்கிறது.

நாங்கள் இருவரும் அறிமுகம் இல்லாதவர்கள் போன்ற தோரணையில்—திம்மப்பன் ஒரு நாற்காலியிலும், நான் தனியாக பெஞ்சின் மீது ஒரு பக்கத்திலும் உட்கார்ந்திருக்கிறோம். எனக்கு வேண்டிய பலகார தினுசுகளை நான் வரவழைத்துக் கொண்டேன். திம்மப்பன் தியானம் மாத்திரம் டிபன்மீது இல்லை. எதையோ ஆலோசனை செய்துகொண்டே உட்கார்ந்திருக்கிறான்.

இந்தச் சமயத்தில் கிளப்புச் சிறுவன் ஒருவன் திம்மப்பனை நெருங்கி, "சார்! உங்களுக்கு என்ன வேணும்" என்று கேட்டான்.

உடனே திம்மப்பன் பையன் முகத்தை ஏற இறங்க நோக்கி, "சோப்பும், பலகையும், வெந்நீரும், அம்பட்டனும் வேணும்" என்றான். அந்தப் பையன் முதலில் வெருண்ட பார்வை பார்த்து விட்டுப் பிறகு கொஞ்சம் கோபத்தோடு "இது அம்பட்டன் கடையல்ல; காபி கிளப்பு" என்று தாட்டியாய்ப் பதில் கொடுத்து விட்டுத் திம்மப்பனை வெறு வெறென்று பார்க்கத் தொடங்கினான்.

திம்மப்பன் புன்முறுவலோடு "என்ன அம்பி பார்க்கிறாய், பின் எதற்காக என்னை என்ன வேணும் என்று கேட்கவேணும்? காபி கிளப்புக்கு வருகிறவர்கள் எல்லாரும் எதற்காக வருவார்கள் என்று நினைத்துக் கொண்டாய்? இவ்வளவு தெரியாமல் போனால் எப்படி?......உன்னுடைய காபியையும் இட்லிகளையும் நீ கொண்டுவந்து வைப்பதை விட்டுவிட்டு என்ன வேணும் என்று கேட்பானேன்!" என்றான்.

அந்தப் பையன் பாவம் ஒன்றும் பேசாமல், முகத்தைக் கருக்கிக்கொண்டு உள்ளே போய் காபியையும் இட்லிகளையும் கொண்டுவந்து திம்மப்பன் எதிரில் வைத்தான். அப்போது திம்மப்பன் மெதுவாக "என்ன அம்பீ! நான் சொன்னது தெரிந்ததா? நாம் எந்தக் காரியத்தைச் செய்தாலும் கொஞ்சம் ஆலோசனை செய்யவேணும். சங்கதிகளை நன்றாகத் தெரிந்து கொள்ள வேணும். காபி ஹோட்டலுக்கு வருகிறவன் கத்தரிக்காய் வாங்க வரமாட்டான் அல்லவா? செருப்பு நல்ல தினுசு கிடைக்குமா என்று கேட்கமாட்டான் அல்லவா? நான் சுருட்டுக்கடை வைத்திருந்தால், என் கடைக்கு வருகிறவன் சுருட்டு வாங்க வந்தான் என்று எண்ணுவேனே யொழிய மாட்டு வியாபாரம் செய்ய வந்தான் என்று நினைக்க மாட்டேன் அல்லவா? என்ன சொல்லுகிறாய்? உண்மையா இல்லையா?" என்றான்.

அந்தச் சிறுவனுக்கு ஏராளமான கோபம்; ஆனால் ஒன்றும் பதில் சொல்லாமல் உள்ளே புறப்பட்டுப்போனான். திம்மப்பன் வார்த்தைகளுக்கு எனக்கு அசாத்தியச் சிரிப்பு வந்தது. ஆனால் அதைச் சமாளித்துக் கொண்டு சும்மா இருந்தேன்.

திம்மப்பனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து அதே மேஜையின் மீது ஒரு வைதிக பிராமணன் இட்லிகளைக் கொண்டுவந்து வைக்கச் சொல்லி இரண்டாந்தடவை சட்னிக்குச் சொல்லி அனுப்பிவிட்டு வெகு அவசரமாகச் சாப்பிட்டுக்கொண் டிருக்கிறான். ஒரு நிமிஷம் அப் பிராமணனை உற்றுப்பார்த்து விட்டு, திம்மப்பன் "என்ன ஸ்வாமிகளே! இங்கே பாருங்கள்......... அந்த இட்லிகளுக்குத் தொட்டுக்கொள்ள வைத்த சட்னியில் தலைமயிராவது ஒட்டறையாவது— இத்தகைய வஸ்துக்கள் எவையேனும் விழுந்திருக்கின்றனவா?" என்று கேள்விகேட்கத் தொடங்கினான்.

வாய்க்குள் எடுத்து வைக்கப்போன இட்லித்துண்டை அருவருப்போடு கீழேபோட்டு விட்டு அந்தப்பிராமணன் "அப்பப்ப! இதென்ன கிரஹசாரம்! மயிர் விழுந்திருக்கிறதா? எனக்குத்தெரியவே இல்லையே" என்று சொல்லிக் கொண்டே பலகாரத்தை விட்டு விட்டு எழுந்து போகச் சித்தமாயிருக்கும்போது, திம்மப்பன் "அது அல்ல நான் சொன்னது. மயிர் விழுந்திருக்கிறது என்று நான் சொல்ல வில்லை. தாங்கள் சாப்பிட்டுக்கொண்டிருந்த சட்னியில் அப்பேர்ப்பட்டவைகள் ஏதேனும் விழுந்திருந்தால் எனக்குச் சொல்லும்படி கேட்டேன். அவ்வளவே யொழிய—" என்று தன்னுடைய இட்லியை மெல்லத் தின்னத் தொடங்கினான்.

பிறகு ஓட்டல் சொந்தக்காரரிடம் சென்று அந்த வைதிக பிராமணன் என்ன சொன்னானோ தெரியவில்லை, ஐயர் கஸ் புஸ் என்று வந்து திம்மப்பனைப்பார்த்து "என்ன சார்! இட்லிக்குப் போட்ட சட்னியில் தலைமயிர்விழுந்திருக்கிறது என்று சொன்னீர்களாமே? எங்கே பார்க்கலாம் காட்டுங்கள். பாவம் அவர் இட்லிகளைச்சாப்பிடாமலே போய் விட்டாரே! இது உங்க

ளுக்கு நன்றாயிருக்கிறதா?'' என்று கொஞ்சம் ஆவேசத்தோடு நறுக்கென்று கேட்க ஆரம்பித்தார்.

ஐயரைப்பார்த்து, திம்மப்பன் "நான் அப்படி ஒன்றும் சொல்லவில்லை'' என்றான்.

"ஒன்றும் சொல்லவில்லையா? பின், நீங்கள் சொன்னதாக அந்தப் பிராமணர் சொன்னாரே?''

"நான் சொன்னது என்னவென்றால், அவர் சாப்பிட்டுக்கொண்டிருந்த சட்னியில் மயிர், ஒட்டடை—இப்பேர்ப்பட்ட வஸ்துக்கள் ஏதேனும் அகஸ்மாத்தாய் விழுந்திருந்தால் எனக்குத் தெரிவிக்க வேணும் என்று கேட்டுக்கொண்டேன்'' என்று திம்மப்பன் சமாதானம் சொன்னான்.

"இப்படிச்சொல்லுவது உங்களுக்கு நியாயமாயிருக்கிறதா?''

"அது அல்ல ஐயர்வாள் நான் சொல்லுவது! சட்னி போன்ற பதார்த்தங்களில், எங்கள் சொந்த வீடுகளிலுங்கூட சகஜமாக நடப்பது என்னவென்றால், பெண்கள் தலைவாரிக்கொள்ளும்போது உதிர்ந்த தலை மயிர் முதலானவைகள் கலந்துவிடுகின்றன. இதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? அந்தக்காரணத்தைக் கொண்டு அந்தப்பிராமணனை அவ்விதம் கேட்டேனே யொழிய, வேறொன்றும் இல்லை. ஒருவேளை நான் "ஐயா! சட்னியில் சீலைத் துணியாவது, பல்லுக்குச்சிகளாவது விழுந்திருக்கின்றனவா? என்று கேட்டிருந்தால் அசந்தர்ப்பமாய்க் கேட்டேன் என்று எண்ணலாம். என்ன சொல்லுகிறீர்கள்? அத்தகைய வஸ்துக்கள் சட்னியில் கலந்து விடுவது என்றைக்கும் நடக்கக்கூடாத காரியமா என்ன?'' என்று திம்மப்பன் பெரிய லெக்சர் கொடுக்க ஆரம்பித்தான்.

ஐயர் முகம் வெளுத்துப்போய்ப் பார்த்துக்கொண்டிருக்கும்போது, இதற்குள் யாரோ அவரை அழைக்க, திம்மப்பனோடு ஒன்றும் பதில் பேசாமல், உள்ளுக்குள்ளே ஏதோ முணுமுணுத்துக்கொண்டே போனார்.

திம்மப்பன் இட்லிகளை எல்லாம் சரிப்படுத்திவிட்டான். காபி இன்னும் சூடாகவே இருந்தமையால் ஆறுகிறவரை உட்காரவேண்டிவந்தது. சும்மா உட்கார்ந்திருக்க நம்ம திம்மப்பனாலே முடியுமா என்ன? தனக்கு எதிரில் பெஞ்சின்மீது உட்கார்ந்திருந்த கோமுட்டி செட்டியார் ஒருவர் காபி குடிக்கும் பிரயத்தினத்தில் இருந்தார். திம்மப்பனுடைய பார்வை எல்லாம் அந்தப்பக்கத்திலேயே இருக்கிறது. அந்தச் செட்டியார் இரண்டு முடக்குக் குடிக்கிற வரைக்கும் பொறுத்துக் கொண்டிருந்து விட்டு, அதற்குமேல் திம்மப்பன் "என்ன செட்டியாரே! நீங்கள் காபி குடித்துக் கொண்டிருக்கிறீர்கள் அல்லவா? உங்களுக்கு ஏதாவது கெட்ட வாசனை வீச வில்லையா?'' என்றுகேட்டான். கோமுட்டி செட்டியாருக்குச் சந்தேகம் பிறந்து பலதரம் காபியை முகர்ந்து முகர்ந்து பார்க்கத் தொடங்கினார். கொஞ்சம் குடித்துச் சப்பளித்துப் பரீக்ஷித்தார்.

"எனக்கொன்றும் புலப்பட வில்லை. என்ன வாசனை என்பது உங்கள் அபிப்பிராயம்?''

"போகட்டும்! ருசியில் ஏதாவது மாறுபாடு தோன்றுகிறதா?''

"என்னமோ போங்கள், கண்டு பிடிக்க முடியாதவனாக இருக்கிறேன். தவிர காபியின் சூட்டுக்குத் தொண்டை வெந்துகொண் டிருக்கும்போது என்ன நிதானம் தெரிகிறது?" என்றார் செட்டியார்.

அந்த மட்டுக்காவது சும்மா இருக்காமல் திம்மப்பன், "அவர்கள் காய்ச்சிக்கொண்டிருந்த பாவில், பீடித்துண்டுகளாவது பொடிப் பொட்டலமாவது விழுந்திருந்து அவை காபியில் வந்திருக்கின்றனவா என்று உங்களைக்கேட்டேன்" என்றான்.

செட்டியார் குடித்துக்கொண்டிருந்த காபியைச் சட்டென்று உமிழ்ந்து விட்டு வெளியிற் சென்று வாந்தியெடுக்கப் பிரயத்தனம் செய்து, வாந்திவாராமையால், வயிற்றில் என்னமோ விகாரமாய் இருக்கிறதென்று ஒரு சோடாவை வாங்கிக் குடித்துவிட்டு, ஐயரிடம் சென்று சாப்பிட்ட கணக்கைக் கொடுத்தார்.

செட்டியார் சென்ற மறு நிமிஷத்திலேயே ஐயர் நாற்காலியை விட்டுத் திடீரென்று எழுந்து, தாவிக் குதித்துக்கொண்டு திம்மப்பனிடம் வந்தார். இந்தத் தடவை வாஸ்தவத்தில் ஏதோ யுத்தம் நடைபெறப் போகிறது என்று நான் பெரிதும் பயந்து போனேன். திம்மப்பனுக்கு மாத்திரம் அந்தப் பயம் இல்லை; ஐயர் கோபத்தோடு தன்னிடம் வருவதைக் கண்டுகொண்டு கலகல வென்று சிரிக்க ஆரம்பித்தான். அவன் சிரிப்பதைக் கண்ட ஐயருக்குச் சகிக்க முடியாத ஆத்திரம் பொங்கி விட்டது. வெறிபிடித்த குரங்கைத் தேள் கொட்டியது போல் ஆகிவிட்டது. வால் மிதிபட்ட பாம்பைப்போல் ஐயர் தஸ் புஸ் என்று கீழுக்கும் மேலுக்கும் பெருமூச்சு வாங்கினார்.

"இதென்ன ஐயா, அநியாயம்? நானும் இந்தவூரில் கிளப்பு வைத்து இத்தனை வருஷம் ஆகிறது; யாரும் இதுவரை ஒரு நாளாவது, காபி நன்றாயில்லை, பட்சண பதார்த்தங்கள் ருசியில்லை என்று சொன்னது கிடையாது. நீங்கள் என் கிளப்புக்கு மிகவும் அபகீர்த்தியை உண்டாக்கிக்கொண்டு வருகிறீர்களே! முதலில் என்னமோ சட்னியில் மயிர் இருக்கிறது என்று சொன்னீர்கள். இப்போது காபியில் ஊற்றின பால் பீடி நாற்றம் அடிக்கிறது என்று சொல்லுகிறீர்கள். இந்த மாதிரி பேசுவது பெரிய மநுஷாளுக்கு அழகா? இத்தனைபேர் தகுந்த யோக்கியதை உடையவர்கள் இங்கே காபி சாப்பிட்டுக்கொண் டிருக்கிறார்களே; எவருக்கும் தெரியாத கெட்ட வாசனை, கெட்ட ருசி உங்களுக்கு மாத்திரம் வந்து விட்டதா என்ன?"

"ஐயர்வாள்! நீங்கள் சாந்தமாகவும், மரியாதையாகவும் பேசினாலொழிய பிரயோஜனம் இல்லை; நீங்கள் என்மீது காரணம் இல்லாமல் பழி சுமத்துகிறீர்கள்; காபியில் பீடி நாற்றம் வீசுகிறதென்று நான் சொல்லக் கிடையாது. அந்த வார்த்தை சுத்தப் பொய்" என்று திம்மப்பன் அழுத்தம் திருத்தமாகச் சத்தம் போட்டுச் சொல்லி, கண்களில் கோபக்குறி காட்டினான்.

"ஆனால் நீங்கள் என்னென்றீர்கள்? செட்டியாரிடம் என்ன சொன்னீர்கள்? அதைத் தெரிவியுங்கள்."

"அப்படிக் கேளுங்கள், சொல்லுகிறேன். காய்ந்துகொண்டிருக்கிற பாலில் பீடித் துண்டுகள் விழுந்து விடுவதற்கு வசையிருப்பதினாலே, அத்தகைய தோஷம் ஏதாவது நடந்திருக்குமோ என்று சந்தேகம் பிறந்து, காபி குடிப்பதற்கு முன்பே சந்தேகம் நிவர்த்தி செய்து கொள்ளுவது நலம் அல்லவா என்று கருதி, செட்டியாரோடு பிரஸ்தாபித்தேன். இன்னும் நான் ஒரு மிடறுக் காபியுங் கூடக் குடிக்கவில்லையே! அப்படியிருக்க காபி என்ன வாசனை அடிக்கிறது என்றால் எப்படிச் சொல்ல முடியும்?" என்று இன்னும் திம்மப்பன் ஏதோ சொல்லிக் கொண்டிருக்கும் போதே, ஐயர் சொல்லுகிறார்,

"போதும்! போதும்!! சும்மா இரும் ஐயா! பாலில் பீடித் துண்டுகள் எப்படி விழுந்துவிடும்? யார் கேட்டாலும் சிரிப்பார்கள்."

திம்மப்பனுக்கு உடம்பில் எரிச்சல் கண்டுவிட்டது. ஐயருக்குப் பக்கத்தில் போய் எதிரில் நின்றுகொண்டு இப்படிச் சொல்லுகிறான்:

"ஐயர்வாள்' பாலில் பீடித்துண்டுகள் எப்படி விழ முடியும் என்றல்லவா கேட்டீர்கள்? சொல்லுகிறேன் கேளுங்கள். உங்களிடத்தில் சம்பளத்துக்காக இருக்கும் வேலைக்காரர்களில்—எல்லாரும் இல்லாத போனாலும் சிலராவது பீடி சிகரெட்டுப் பிடிக்கிறவர்கள் இருக்கிறார்களா இல்லையா? காபி கிளப்புகளில் சேர்ந்திருக்கிற அநேக பிராமண வாலிபர்களிடம் இத்தகைய கெட்ட வழக்கங்கள் ஏராளமாக நிறைந்திருக்கின்றன. கிளப்புகளில் அவர்களைக் கண்டாலே வாந்திவரும். ஜட்கா வாலாக்கள்கூடக் கொஞ்சம் நன்றாயிருப்பார்கள். அவர்களை யாரும் பிராமண ஜாதி என்று சொல்லமாட்டார்கள். ஆடைகளும் பூணூலும் நெருப்பில் போட்டாலுங் கூட வேகா. வாயில் சதா சர்வகாலம் வெற்றிலை பாக்குப் புகையிலை—எச்சில் நிறைந்த தம்பலம். இடுப்பில் பொடிடப்பி. மடியில் பீடிக்கட்டு நெருப்புப் பெட்டி. ஸ்திரீ வேஷக்காரன் மாதிரி தலை முழுதும் வைத்திருக்கும் மயிரில்—அள்ளி முடிந்த கொண்டை; அல்லது கிராப்பு. அவர்கள் பேசுவதோ சில ஹிந்துஸ்தானி இங்கிலீஷ் வார்த்தைகள் கலந்த "இல்லாடித் தமிழ்." அவர்கள் எப்படியோ போகட்டும். அதைப்பற்றி நான் இப்போது ஏன் பேசவேண்டும். என்னமோ நினைத்தேன் வந்து விட்டது. அடுப்பங்கரையில் உங்கள் வேலைக்காரர்கள் எல்லாரும் சேர்ந்து பலகார பட்சணங்களைப் பக்குவம் பண்ணும் போது பீடிகள் பிடிக்க மாட்டார்களா? பொடிப் போடமாட்டார்களா? வெற்றிலை பாக்குப் போடமாட்டார்களா? எல்லாந்தான் செய்வார்கள். அந்தச் சமயத்தில் நீங்கள் ஒருவனை ஏதோ வேலையின் மீது சத்தம்போட்டு அழைக்கிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவன் அப்போது பீடி குடித்துக் கொண்டிருக்கிறான். அந்தப் பீடியைப் பிடித்துக்கொண்டே அவன் உங்கள் எதிரில் வரமாட்டான் அல்லவா? உங்களுடைய குரலைக் கேட்டவுடன் அவன் அந்தப் பீடியை அணைத்து, ஏதாவதொரு மாடத்திலோ அல்லது விட்டத்திலோ பத்திரப்படுத்திவிட்டு, பிறகு உங்களிடம் வருகிறான். பொடிப் பொட்லங்களையும் டப்பிகளையும் ஒளித்து வைத்துக் கொள்ளுவதற்குங் கூட இவைகள் தான் இடங்கள். இந்த மாதிரி மறைத்து வைத்தவைகளை மறுபடியும் எடுக்க மறந்துபோவதும் சகஜம். அப்போர்ப்பட்ட பீடி சிகரெட்டுத் துண்டுகள் பொடிப்பொட்லங்கள் முதலானவைகள்

காற்று அடிப்பதினாலோ, அல்லது பல்லிகள், எலிகள் முதலானவைகள் திரிவதினாலோ நழுவி, கீழே உள்ள பலகார பட்சணங்களிலும், பாலிலும் விழுந்து விடுகின்றன. அப்பேர்ப்பட்ட குற்றங்கள் நடை பெறுவதை நாம் நேரில் பார்க்காவிட்டாலும், அப்படி நடப்பதற்கு வகை யிருக்கிறது என்று ஒப்புக் கொள்ளுகிறீர்களா இல்லையா? அவ்வளவே அல்லாமல், நீங்கள் மனப்பூர்வமாய் வேணும் என்றே பாலில் பீடி சிகரெட்டுத் துண்டுகளைப் போட்டுக் கொண்டிருக்கிறீர்கள் என்று யார் சொன்னார்கள்? ஒருகால் யாராவது அப்படிச் சொன்னாலும் அது நம்பக்கூடாத விஷயம் என்று நானுங்கூடச் சொல்லுவேன். குற்றங்கள் எல்லாவற்றிலும் வந்து விடுகின்றன. வரமுடியாது என்று எண்ணுவது முட்டாள் தனம்! போகட்டும் ஐயர்வாள்! நீங்கள் இந்த மாதிரி தோஷம் உண்டாகக் கூடும் என்பதை என்றைக்கேனும் கேட்டதும் இல்லை, பார்த்தும் இல்லை என்று பிரமாணமாய்ச் சொல்ல முடியுமா?

"என்னமோ மஹாராஜா! உங்களோடு வாதத்துக்கு வர என்னால் முடியாது. எனக்கு இந்தமாதிரி சங்கதியே ஒன்றும் தெரியாது" என்று ஐயர் முகத்தைக் கருக்கிக் கொண்டார்.

"உங்களுக்குத் தெரியாது என்றால் நான் சொல்லுகிறேன் அல்லவா, இங்கே கேளுங்கள். சர்க்கரையிலும், தேனிலும், நெய்யிலும் எறும்புகள் சேர்ந்து விடுகின்றன. நெய்ப் பாத்திரங்களிலும் எண்ணெய்ப் பாத்திரங்களிலும் அநேகவித பூச்சிகளும் வண்டுகளும் விழுந்து விடுகின்றன. தானியங்கள் நிறைந்த கடைகளிலும், களஞ்சியங்களிலும் எலிகளும் பூனைகளும் வேண்டிய ரஸாபாஸம் செய்துவிடுகின்றன. பருப்பு வகைகள் உள்ள பாத்திரங்களிலும், ஐந்தறைப் பெட்டிகளிலும் பாச்சை-மூஷிகப் பிரவேசம் இல்லாமல் இருக்காது. இனி, நமது சாப்பாட்டுத் தினுசுகளிலுங்கூட எத்தனையோ விபரீதங்கள் நடந்துகொண்டே இருக்கின்றன. தோட்டக்கீரை, அரைக்கீரை, புளிச்சக்கீரை முதலான கீரைப் பதார்த்தங்கள் செய்த காலத்தில் பச்சைப் புழுக்களும் சிறு வீட்டில்களும் சாப்பிடும் இலையில் காட்சி கொடுப்பதும் உண்டு. அதிரஸங்கள், போளிகள்—இத்தகைய பலகாரங்களில் கட்டெறும்புகள், ஈக்கள் விழுந்துகிடப்பது விந்தை அல்ல. பெரிய பாத்திரங்களில் பால் காய்ந்து கொண்டிருக்கும்போது, மேலிருந்து, பல்லிகளும் தேள்களும், சுருட்டைப் பாம்புகளுங் கூட விழுந்து விடுவதில் ஆச்சரியம் இல்லை. அநுபவத்தின் மீது இந்தச் சங்கதிகளை எல்லாம் நம்முடைய முன்னோர்கள் நன்றாகத் தெரிந்து வைத்திருந்ததினாலேயே "ஒவ்வொரு மனிதனும் ஒரு வருஷகாலத்தில் குறைந்த பட்சம் யானைத்தலை எடை மாமிஸம் புசித்து விடுகிறான்" என்று நூல்களில் எழுதினார்கள். இது கிடக்கட்டும். இன்னொரு விஷயம் ஐயர்வாள்! மனுஷப் பையலுக்கு அசங்கியம்— அருவருப்பு, ஜீவகாருண்ணியம் என்பதெல்லாம் எது? சும்மா வேஷமபோடுகிறானேயொழிய காரியத்தில் ஒன்றும் இல்லை. எத்தனையோ ஆபாஸங்களைத் தலைமேல் வைத்துக் கொண்டாடுகிறான். ஸ்வாமிபேரைச் சொல்லிக் கொண்டு தின்கிறான். தேன் எங்கிருந்து வருகிறது? எத்தனை ஈக்கள் வாயில் மண்ணைப் போடுகிறான்! எத்தனை ஈக்களைத் தீயிட்டுக் கொளுத்துகிறான்! அதைக் கொண்டுவந்து ஸ்வாமிக்கு அபிஷேகம் என்றும், பஞ்சாமிர்தம் என்றும் செய்து தான் வயிறு வெடிக்கத் தின்கிறான். நீங்கள் மேலே போட்டுக்

கொண்டிருக்கிறீர்களே, இந்தப் பட்டு எங்கிருந்து வந்தது என்பதைச் சற்றே யோசனை செய்து பாருங்கள். எத்தனை லட்சம்—கோடிப் புழுக்கள் தினந்தோறும் அகோர சங்காரம் ஆகின்றன என்பதைக் கருணையோடு கவனிப்பவர்கள் பட்டுத் துணியைக் கையிலும் தொடுவார்களா? மனுஷன் புத்தியை என்ன சொல்ல? பட்டுத்துணி தூய்மை யுடையதாம்! பத்து வருஷம் அழுக்கோடு வைத்திருந்தாலும் ஸ்வாமி கோயிலுக்குக் கட்டிக்கொண்டு போகலாமாம்! தூயபருத்தி நூல் ஆடை குற்றமுள்ளதாம்! ஒருநாள் உபயோகித்து விட்டால் பிறகு வெளுக்காமல் கையில் தொடக் கூடாதாம்! இதன் ரகஸியம் என்ன? பட்டு விலை அதிகம், தினம் தினம் உபயோகிக்கவும் தண்ணீரில்போடவும் முடியாது என்பதைத் தவிர வேறு என்ன சொல்லமுடியும்? இன்னும் இப்படி எவ்வளவோ சொல்லலாம்! அதெல்லாம் இப்போது எதற்கு? உங்களுக்கும் இதென்னடா இவன் இப்படி உளறுகிறான் என்று சள்ளையாயிருக்கும். என்ன சொல்லுகிறீர்கள்?''

"போதும் ஆண்டவனே! உங்கள் பிரசங்கத்தை இதோடு நிறுத்திக் கொள்ளுங்கள். உங்கள் புண்ணியம் இருந்தே இருக்கிறது. நீங்கள் சொன்னது போல் எனக்குக்கேட்பதற்குங் கூடக் கஷ்டமாயிருக்கிறது. நீங்கள் சொன்னதெல்லாம் உண்மையாகவே இருக்கலாம்; ஆனால் எங்கள் கிளப்பில் மாத்திரம் நீங்கள் இந்த மாதிரியான பிரசங்கம் செய்யக்கூடாது. காபி ஹோட்டலுக்கு வருகிறவர்கள் அவரவர்களுக்குத் தேவையானவைகளைச் சாப்பிட்டுப் போக வேண்டியதே யொழிய இப்பேர்ப்பட்ட வார்த்தைகளெல்லாம் எதற்காகப் பேசவேணும்?

இன்னும் சும்மா இருந்தால் நன்றாயிருக்காது என்று நான் எழுந்து "என்ன ஐயர்வாள்! இதற்காக இவ்வளவு விவாதம்— ஆராய்ச்சி எல்லாம் எதற்காக? சும்மா இருங்கள்,'' என்று சாந்தமாகச் சமாதானம் சொல்லி அனுப்பி விட்டு, திம்மப்பனைப் பார்த்து 'காபி ஆறிப்போய் விட்டது' சீக்கிரம் சாப்பிட்டால் போகலாம் நாம், காபிகிளப்புக்கு வந்து சண்டை போட்டுக் கொள்ளுவது நன்றாயிருக்காது'' என்று சொல்லித் துரிதப் படுத்தினேன்,

வெளியில் வந்தபிறகு வெற்றிலைப் பாக்கு வாங்கிக்கொண்டே என்னைப்பார்த்துச் சிரித்துக்கொண்டு சொல்லுகிறான் திம்மப்பன், "எவனுக்கும் மூளை என்கிறதே கொஞ்சம் கூட இருப்பதாகத் தெரியவில்லையே. பேசினால் சரியாக அர்த்தங்கூடச் செய்து கொள்ளாமல் அசந்தர்ப்பமாக நடந்து கொள்ளுகிறார்கள், அதேன்? என் வார்த்தைகளில் எந்த விதமான கெட்ட அர்த்தம் இருக்கிறதென்று அந்த ஐயன் அப்படிக் கடிக்கவந்தான்?''

ஒன்றுஞ் சொல்லாமல் எனக்குள்ளே நான் சிரித்துக் கொண்டேன்.

---

கவுண்டர்:—" எங்கள் ஊருக்கு ஒரு டிக்கட்டுக் கொடுங்கள்.''

புக்கிங் கிளார்க்கு:—" எந்த ஊருக்கு?''

கவுண்டர்:—" எங்கள் ஊருக்குத்தான். நான் இன்னொரு ஊருக்கு ஏன் போகிறேன்?''

# ஸ்ரீமத் சிவாநந்தசாகர யோகீசுவரரின் ஜீவிய சங்கிரகம்.

—:—

இம் மகானைத் தமிழுலகு நன்குணருமாயினும் ஆனந்தபோதினியின் ஆயிரக் கணக்கான சந்தா நேயர்களில் இவரை அறியாதார் எவருமே யிரார் என்பது திண்ணம். யோகீசுவரர் கடந்த பத்து வருட காலமாக நமது ஆனந்தபோதினிக்குச் செய்துவந்த விஷயதானம், பண்டிதர், பாமரர், வேதாந்தி, சித்தாந்தி, சைவ வைணவர், மகம்மதியர், கிறிஸ்தவர் யாவரும் போற்றிக் கொண்டாடத் தக்க விதமாய் அமைந்திருந்ததாதலின் அவர்கள் நம்மை விட்டுப் பிரிய நேர்ந்தது நமது துர்ப்பாக்கியமே யாம்.

இவர்களுடைய ஜீவிய சரிதம்—படிப்பவர்க்கு நல்ல படிப்பினையைப் போதிக்கக்கூடியதா யிருக்கின்றமையினால் இப்பெரியாரை நம்முடைய பத்திரிகையின் வாயிலாக நாம் பாராட்ட வேண்டியது நமது கடமையே.

இப்பெரியார் புகழுடன் தோன்றினரு ளொருவராவர். இவர்களது பிள்ளைத் திருநாமம் கிருஷ்ணமூர்த்தி. இப்பெரியாரை ஈன்று உலகுக்குதவிய உத்தமர் அண்ணாவையர் என்னும் பெயர் பெற்ற அஷ்ட ஸஹஸ்ர பிராமணர். அண்ணாவையர் நாகபட்டினத்தில் கப்பல் வியாபாரி யொருவரிடம் மானேஜராயிருந்து ஏராளமான பொருள் தேடினாராலும், யோகீசுவரருக்காவது அவருடன் பிறந்த சகோதரர் இருவருக்காவது ஒரு சிறிது சொத்தும் வைத்திலர். தாம் தேடிய பொருளைத் தாமே செலவிட்டு, யோகீசுவரர் மூன்று வயதுள்ள சிறு குழந்தையாயிருந்தபோதே அவர் காலமாய்விட்டார். அப்பால் யோகீசுவரர் தமது தமையனாரிருவரில் சுப்பராயர் என்பவருடைய ஆதரவில் வளர்ந்துவந்தார்.

சுப்பராயர் தமிழில் நல்ல அறிவு வாய்ந்த ஒரு வரகவியாக விளங்கினின்றார். அவர்க்கு ஆங்கில அறிவு மிகச் சொற்பம். அந்தச் சொற்ப அறிவைக் கொண்டே தொடக்கத்தில் தென்னிந்திய இருப்புப்பாதை உத்தியோக சாலையில் ஒரு தந்தி குமாஸ்தாவாக அமர்ந்து பின் ஸ்டேஷன் மாஸ்டராய் அப்பால் தாசில்தாருமானார். அவருடைய கவி புலவர் கொண்டாடத்தக்க பெருமையுடையதாயிருக்கும். அவர் சிறந்த சுப்ரமணிய பக்தர். அவர் யோகீசுவரருக்குத் தாமே தமிழ்க் கல்வி கற்பித்தார். ஆங்கிலம் படிக்க ஆங்கில கலாசாலைக்கும் அவர் யோகீசுவரரை அனுப்பினார்.

யோகீசுவரர் ஒன்பதாவது பிராய மடையுமுன்னரே நிகண்டு, குறள், நன்னூல் முதலிய நூல்களிலும் பாரத பாகவத இராமாயண, கந்தபுராண வசன நூல்களிலும் ஐயந்திரிபறப் பயின்று தேர்ந்து சிற சிறு கவிகளுஞ் செய்யுந் திறமை யெய்தினார்; பதினாறுவது வயதிற்குள் மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேர்ந்து, தமிழ் இலக்கண இலக்கிய நூல்கள் பலவற்றிலும் தேர்ச்சியுற்று அஷ்டாவதானம் செய்ய வல்லவருமானார். அதன்பின் கவர்ன்மெண்ட் ட்ரெயினிங் ஸ்கூலில் சேர்ந்து உபாத்தியாயர் பரீட்சையிலும் தேறினார். இக்காலத்திற்குள் யோகீசுவரர் அலங்கார சாஸ்திரம், வேதாந்த சித்தாந்த சாஸ்திரம் ஓதியுணர்ந்து பெருஞ் சபையில் பிரசங்கம் பண்ணும் ஆற்ற லடைந்தார்.

அப்பால் யோகீசுவரருக்கு விவாகமாயிற்று. இவரை நாயகராக அடைந்த மாதரசியாரும், இவர்பால் தமிழோதி யுணர்ந்து கவிபாடுந் திறமை யுடையவரா யிருந்து பாலசரஸ்வதி தேவ குஞ்சரியம்மை, கஜாம்பிகை என்னும் இரண்டு புதல்வியரை யளித்து, தப்புதல்வியர் சிசுப்பிராயத்தி லிருந்த போதே காலமாயினர். இக்காலத்தி லெல்லாம் யோகீசுவரர், சிதம்பரத்தில் ஸ்ரீனிவாச சாஸ்திரிகளால் நடத்தப்பட்டு வந்த "பிரஹ்ம வித்யா" என்னும் பத்திரிகைக்கும், சென்னையில் வை. இரத்தின செட்டியாரால் நடத்தப் பட்ட "ஆரிய ஜனப் பிரியன்" என்னும் வாரப் பத்திரிகைக்கும் உபபத்தி ராசிரியரா யிருந்து, அரிய பெரிய வியாசங்களை எழுதிப் பிரபல பேர் பெற்றனர்.

மனைவியார் இறந்ததும் யோகீஸ்வரர் தம் இரு பெண் குழந்தைகளையும் தமையனார் வீட்டில் விட்டு விட்டுத் தாம் யாத்திரை புறப்பட்டுப் பல இடங் களுக்குப் போய்க் கடைசியில் பொதியை மலையை அடைந்து அங்கே சில வருஷ கால மிருந்து யோகம், வைத்தியம், மாந்திரீகம் முதலியன தேர்ந் துணர்ந்து மீண்டும் இல்லமடைந்து தம்புதல்வியுடன் திருச்சியில் நாராயண பிள்ளை என்கிற பிரபு ஒருவரின் ஆதரவிலிருந்து வந்தனர்.

நமது யோகீசுவர ரவர்களிடம் கல்வி பயின்றவர் பலர். அவர்களில் தஞ்சை செயின்ட் பீட்டர்ஸ் காலேஜில் தமிழ்ப்பண்டிதரா யிருந்த சேதுராம பாரதியா ரென்பா ரொருவர். காரைக்காலில் இப்போது சீமான் சாமி மடாதிபதியா யிருக்கும் குமாரானந்தசாமி என்பார் மற்றொருவர்.

திருச்சியிலிருந்த யோகீசுவரர் சென்னைக்கு 1898-வருஷம் வந்து ஆரியன் ஹைஸ்கூலில் 15-வருஷகாலம் தமிழ்ப்பண்டிதரா யமர்ந்திருந்து பின்னர் யாத்திரிகராய்ப் பல க்ஷேத்திரஞ் சென்று முடிவில் சென்னையம்பதிக்கே வந்து சேர்ந்து தம் மாணவர்க்குப் பாடம் சொல்லிக்கொண் டிருக்கும் போதே 'முருகா' என்று கூறிய நிலையில் தமது புகழுடம்பை இப்புவியில் நிலை நிறுத்திப் புண்ணிய உலகம் புகுந்தருளினர்.

யோகீசுவரர் தம்முடைய கடைசிக்காலம் வரையில் பாஹ்ய பூஜை செய்து வந்தார்.

'கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி"

என்னும் நிறைமொழியை விளக்கிப் போந்த இம்மகான் உபாத்தியாயத் தொழிலிலிருந்து பல சிறுர்களை நல்வழியில் நிறுத்தியதோடு, உபபத்தி ராசிரியராக, சென்னையில் 'ஆரிய ஜனப் பிரியன்' என்னும் வாரப்பத்திரிகை யையும், அரிய விஷயதானராக ஆநந்தபோதினி மாதப் பத்திரிகையையும் பொதுநலப் பிரியத்துடன் சிறப்பித்து வந்த நலம் போற்றத்தக்கதொன்றாம். இவர் ஆன்மா என்றும் சாந்தியடைவதாக.

ஓரன்பன்.

---

குறிப்பு:—ஸ்ரீ சிவாநந்தசாகர யோகீசுவரர் எழுதிவைத்திருக்கும் கட்டுரைகளின் கையெழுத்துப் பிரதிகள் பல எம்மிடம் இருக்கின்றன. நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகையில் எப்பொழுதும் போல் அவை தொடர்ச்சியாக வெளியிடப் பெற்றுவரும். [ப—ர்.]




# பெண்களின் சாமுத்திரிகம்

**(வி. ரா.)**

மக்களின் உறுப்பிலக்கணம் அல்லது சாமுத்திரிக சாஸ்திரம் மிகவும் புராதனமானது. இங்கிலாந்து—அமெரிக்கா—ஜர்மனி முதலான நாடுகளில் இது மிகவும் அதிகமாய்ப் பரவியிருக்கிறது. இந்தச் சாஸ்திரத்துக்குச் சம்பந்தமான நூல்கள்—மாதப் பத்திரிகை முதலானவைகள் மேனாடுகளில் ஏராளமாக வெளியிடப்பட்டு வருகின்றன. மிகவும் சிறந்த சாஸ்திரங்களில் ஒன்று என்று மதிக்கத்தக்க சாமுத்திரிக சாஸ்திரத்தைக் கண்டு பிடித்த இந்தியப் பெரியோர்களின் அறிவு நுணுக்கத்தைப் புகழ்ந்து போற்றாத மேனாட்டு அறிஞர் ஒருவரும் இல்லை என்று கூறலாம். ஆனால் என்ன பயன்? இப்போது அந்தச் சாஸ்திரம் நமது நாட்டில் அநேகமாய் மறைந்து விட்டது என்று சொல்லுவது உயர்வு நவிற்சி அல்ல—உண்மையே யாகும். நாம் இப்போது அந்தச் சாஸ்திர உண்மைகளை நேரே தெரிந்து கொள்ளுவது சாத்திய மில்லை. மேனாட்டார் எழுதிய நூல்களின் வழியாகவே சாமுத்திரிக இலக்கணங்களைத் தெரிந்துகொள்ள வேண்டிய துரவஸ்தை நேரிட்டிருக்கிறது. மனிதனுடைய உடல் அமைப்பு—ரேகைகள் முதலியவைகளால் வாழ்க்கையில் ஏற்படும் நன்மை தீமைகளைக் கண்டு தீர்மானித்துச் சாஸ்திரமாகச் செய்த முனிவர்கள் நூற்றுக் கணக்கானவர்கள். அவர்களுடைய பெயர்களுங்கூட இப்போது நமக்குத் தெரிவது துர்லபம். நிற்க, பெண்களுக்குச் சம்பந்தப்பட்ட வரை உள்ள சாமுத்திரிக இலக்கணங்களை ஒருவாறு திரட்டி நமது "ஆனந்தபோதினி"யில் வெளியிட எண்ணுகிறேன்.

## பெண் முகம்—நெற்றி

1. அர்த்த சந்திர வடிவமைந்த நெற்றியோடு கூடிய பெண் பிறந்த வீட்டில் சம்பத்தும், கல்வியும், பொருளும் நிறைந்து விளங்கும். அவளுக்கு மக்கட் பேறு உண்டாகும். உடன் பிறந்த சகோதரர்கள் இருப்பார்கள். இவள் பிறந்தது முதல் இறக்கும் வரை, வீட்டில் உள்ள எல்லாரும் எல்லா நலன்களையும் அநுபவித்துக்கொண் டிருப்பார்கள்.

2. விசாலமான நெற்றியோடு விளங்கும் பெண் தீர்க்காயுள்—அறிவுச் சிறப்பு—பேச்சு வன்மை—பரோபகாரம் முதலான நற்குண நலங்களைப் பொருந்தி யிருப்பாள்.

3. நெற்றியிலும் முகத்திலும் எள்ளுக்கு நிகரான கரிய மச்சங்கள் (பிறவி மச்சங்கள் அல்ல) பொருந்தியுள்ள பெண் மக்கட் செல்வத்தையும் பொருட் செல்வத்தையும் படைத் திருப்பாள்.

4. நெற்றியில் துண்டு விழாத ஐந்து நேரான குறுக்கு ரேகைகள் உள்ள பெண் நூறு ஆண்டுகள் வாழ்வாள். இத்தகைய ரேகைகள் நான்கு இருந்தால் எண்பது ஆண்டுகள் வாழ்வாள். நெற்றியில் சுத்தமாக ரேகைகளே இல்லாத பெண் நூற்றெட்டு ஆண்டுகள் வாழ்வாள்.

5. நெற்றியில் எந்த விதமான ரேகைகளும் இல்லாமல், சில நரம்புகள் மாத்திரம் தடித்தது போல் காணப்படும் பெண் ராஜ மகிஷிக்கு நிகரான ஆயுளையும் செல்வத்தையும் நுகர்வதோடு தயை—தாட்சணியம்—பொறுமை முதலிய நற்குணங்கள் பொருந்தப்பெற்று உண்மையே பேசுவாள். இத்தகைய பெண்மணியைத் திருமணஞ் செய்த கணவன் அஷ்ட ஐசுவரியங்களையும் அநுபவிப்பான்.

6. நெற்றி குறுகியும், மத்தியபாகம் பள்ளமாகவும் உள்ள பெண்ணினிடம் போக சுகமும், தெய்வ பக்தியும் காண்பது அரிது. இவள் அநுபவிக்கத்தக்க இன்பங்கள் எல்லாம் நாற்பது ஆண்டுகள் நிறைவதற்கு முன்பே பூர்த்தியாகி விடும்.

7. துண்டு துண்டான—கத்தரிப்பு ரேகைகள் பொருந்திய நெற்றியோடு கூடிய பெண் துன்பத்தையும் வறுமையையும் அநுபவிப்பாள்.

8. தப்புச்சுழி (இடச்சுழி) நெற்றியில் பொருந்தப் பெற்றபெண் விதவை ஆவாள். நெற்றி நடுவில் சரியான சுழி (வலச்சுழி) இருந்தால் அந்தப் பெண் கலியாணமான சில நாட்களிலேயே கணவனை விட்டுவிட வேண்டி நேரிடும்.

9. சதைப் பற்றோடு கூடி, கூந்தலுக்கும் (வகுப்பு எடுக்கும் இடத்துக்கும்) கண் புருவங்களுக்கும் நடுவிடம் மூன்று விரற்கிடை அகலம் உள்ள நெற்றியோடு விளங்கும் பெண், பொன்னும் பொருளும் வாகனங்களும் சிறக்கப்பெற்று உத்தியோக லாபத்தையும் பெறுவாள். நிற்க, இவளுடைய குடும்பமும் ஏக குடும்பமாகவே இருக்கும். இந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் உண்மை பேசுபவர்களாகவும், ஒழுக்கத்திற் சிறந்தவர்களாகவும் விளங்குவார்கள்.

10. குறுகிய நெற்றியுள்ள (வகுப்பு எடுக்கும் இடத்துக்கும் புருவங்களுக்கும் நடுவிடம்.) பெண்ணின் கணவன் எப்பொழுதும் அபாயகரமான தொல்லைகளில் மாட்டிக்கொண்டிருப்பான். அன்பு அற்றவர்களா யிருப்பார்கள். தெய்வ பக்தி சூனியம்.

11. பூரண சந்திரனுக்கு நிகரான முகத்தோடு விளங்கும் பெண் எல்லாராலும் போற்றிப் புகழப் படுவாள். ராஜமகிஷிக்குச் சமமான இன்பங்களை நுகர்ந்துகொண் டிருப்பாள்.

12. செந்தாமரை மலருக்கு ஒப்பான நிறம் பொருந்திய முகத்தோடு விளங்கும் பெண் எல்லாவித போகபோக்கியங்களையும் அநுபவிப்பது மாத்திரம் அல்லாமல் வேறு விதமான வருவாயுங்கூடப் பொருந்தி வாழ்வாள்.

13. வட்டமாகவுள்ள முகத்தோடுகூடிய பெண், புகழ், பொருள், கல்விகளைப்பொருந்தியிருப்பதோடு உத்தியோகத்தையுங் கூட வகிப்பாள்.

14. மிகவும் அகன்ற முகத்தோடு கூடிய பெண்ணுக்கு இன்ப துன்பங்கள் இரண்டும் சமமாக இருக்கும்.

15. மிக மிக அழகோடு மலர்ந்து விளங்கும் முகம் பொருந்திய பெண் சகல சம்பத்தோடு பிறந்தது முதல் இறக்கும் வரை மகத்தான சுகங்களை நுகர்ந்துகொண்டிருப்பாள். அவளிடம் பரோபகாரம், தரும சிந்தனை முதலான நற்குணங்கள் தாண்டவ மாடிக்கொண் டிருக்கும்.

16. சதைப் பற்றோடுகூடி நல்ல குண்டுமுகம் பொருந்தி விளங்கும் பெண் சகல சம்பத்தோடு அநேக ஏவலாளர்களையும், பசுக்களையும், குதிரைகளையும் உடையவளா யிருப்பாள்.

17. முகம் சரிய நிறமாக இருந்து, ஆண் தன்மைக் கூறுகள் அமைந்துள்ள பெண் குரூரத்தன்மை வாய்ந்தவளாகவும், மற்றவர்களின் மீது அதிகாரம் செலுத்தும தன்மை வாய்ந்தவ ளாகவும் இருப்பாள்.

18. முகத்தில் ரத்தம்வற்றி தேஜஸ் குறைந்திருக்கும் பெண் துன்பங்களை அநுபவிப்பாள். எல்லா விஷயங்களிலும் அவளுக்கு அதிருப்தி தோன்றிக்கொண்டே இருக்கும்.

19. நீளமான முகங்கொண்ட பெண்ணுக்கு போக சுகம் குறைவாக இருக்கும். அதுவும் நாற்பது வயதுக்குள்ளேயே முடிந்து விடும்.

20. ரேகைகளும் மேடுபள்ளங்களும் இன்றிச் சுத்தமாகவுள்ள நெற்றியோடு கூடிய பெண் சிறந்த இன்பங்களை அநுபவிப்பாள். முகம் எவ்வளவு அழகாயிருக்கிறதோ அவ்வளவு இன்பத்தை அந்தப் பெண் அநுபவிப்பாள்.

21. முகத்தில் சுழி இருந்த பெண் விதலை யாவாள்.

## சந்தாநேயர்கள் கவனிக்க.

—:(o):—

நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகையின் பதினைந்தாவது ஆண்டுச் சந்தாவோடு பிரமோதூதவருஷ பஞ்சாங்கத்தின் பொருட்டு அணா இரண்டு சேர்த்து அனுப்பிய எல்லாச் சந்தாநேயர்களுக்கும் 21—2—30 தேதியில் ஷ பஞ்சாங்கங்களை அனுப்பி விட்டோம் என்பதை இதன் மூலம் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

மானேஜர்.




## கிருஷ்ணஸிங் அல்லது துப்பறியும் சீடன்.

(510-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆரணி-குப்புசாமி முதலியார்.

### 14-வது அத்தியாயம்

ஆனந்தஸிங் இரண்டு நிமிடங்களில் அவள் கருத்தை யறிந்து கொண்டான். உடனே யவளை நோக்கி "தெரிந்து கொண்டேன். நான் துப்பறிபவன் என்பதையும், என்னைக் காப்பாற்றியதால் உனக்கு மிக்க வேண்டியவர்களுக்குத் தீங்கு செய்வதாய் முடிகிறதென்றும் பயப்படுகிறாய்" என்றான்.

அக் கன்னிகை யழுதுகொண்டே தலையசைத்தாளே யன்றி வாயால் ஒன்றும் கூறவில்லை.

ஆனந்தஸிங்:—ஆகையால் நீ என்னைக் காப்பாற்றியதற்குக் கூலியாக அவர்கள் மேல் வஞ்சம் தீர்த்துக் கொள்ளாது விட்டுவிடவேண்டு மென்கிறாய்.

கற்பகம்:—"ஆம்" என்று கூறிவிட்டு மறுபடி, "அந்தோ இப்படிப்பட்ட உதவிசெய்து விட்டு அதற்குக் கூலிகேட்பது மிக்க இழிவான காரியமே யென்று நான் அறிவேன். ஆயினும் நான் அப்படிச் செய்யவேண்டியவளாயிருக்கிறேன். செய்தே தீரவேண்டும்.

ஆனந்தஸிங் சிந்தித்துப் பார்த்தான். தான் ஜெயமடைவதானால் கற்பகமும் அவள் தாயும் பகிரங்கமாய் அவமானப் படுத்தப்படுவதோடு, தண்டனை யடைந்தாலும் அடைவார்கள் என்பது நிச்சயம். அக் களவில் அத் துஷ்டர்களுக்கு உடந்தையாயிருந்த இவள் இத்தகைய பெருந்தன்மையான காரியத்தை யெப்படிச் செய்தாள் என்பது அவனுக்கு விளங்கவில்லை. கடைசியில் இவள் அக் கள்ளருக்கு உளவாயிருந்து அவர்கள் ஜெயமடைய வேண்டுமென்று விரும்பியவளாயின் இப்போது தன் உயிரைக் காப்பாற்றியிருக்கிறாள்.

"இப்போது இவள் காப்பாற்றிய உயிருக்காக நீதிக்கு விரோதமாய் கள்ளரைப் பற்றி ஒரு முயற்சியும் எடுத்துக் கொள்ளாமல் விட்டுவிட்டு, இக் களவைக் கண்டு பிடிக்க நம்மை யமர்த்தி நம்பிக்கொண்டிருப்பவர்களையும் மோசம் செய்யவேண்டும். நமது கௌரவத்தையும் போக்கடித்துக் கொள்ள வேண்டும்" என்று சிந்தித்துப் பார்த்தான்.

ஒன்று தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள அவள் விருப்பப்படி செய்யவேண்டும். இன்றேல் நன்றியற்ற நடக்கையாய் முடியும். அப்படியே செய்தாலோ தன் கௌரவம் அடியோடு போய்விடும்.



கிழவன்:—"என்னுடைய பேரன் உங்கள் ஆபீஸில் வேலை செய்கிருன். அவனை உங்களுக்குத் தெரியுமா?"

மானேஜர்:—"தெரியும். இரண்டு மூன்று நாளைக்கு முன்பு நீங்கள் இறந்துபோய் விட்டதாக லீவ் வாங்கிக் கொண்டுபோனுன். இன்னும் ஆபீஸுக்கு வரவில்லை.

***

வெள்ளையப்பன்:— உனக்கு ஒரு பெண்டாட்டியும் எழு பிள்ளை குட்டிகளும் இருந்துங்கூட தினந்தவருமல் சினிமாவுக்கும், காபிகிளப்புக்கும் போய்க்கொண்டே இருந்தால் உனக்கு வருகிற சொற்ப சம்பளம் எப்படிக் கட்டி வருகிறது ஐயா?"

நாகரிகப்பிரியன்:— அவர்களை எல்லாம் வீட்டிலேயே விட்டு விட்டுப் போய் விடுவேன் அல்லவா?"

***

ட்ராமா டிக்கட் கலெக்டர்:—"சார்! என் வேலை மிகவும் கஷ்டமானதாயிருக்கிறது."

ட்ராமா மானேஜர்:— "என்ன கஷ்டம்?"

டிக்கட் கலெக்டர்:—"உங்கள் சம்சாரங்கள் என்று இரண்டு பெண்கள் வந்தார்கள். அவர்களை டிக்கட் கேட்காமலே உள்ளே போகச் சொன்னேன். மறுபடியும் ஒரு பெண் வந்து அப்படியே சொல்லுகிருள். என்ன செய்யச் சொல்லுகிறீர்கள்?"

***

புருஷன்:—"பெண்களுக்குக் கைகள் அழகாய் இருக்கவேணும் என்ருல் என்ன செய்யவேணும்?"

மனைவி:—"என்ன செய்யக் கூடாது?"

***

வாத்தியார்:—"உன் அப்பா ஒரு காரியத்தை ஒரு மணிநேரத்தில் செய்து முடிக்கிருர் என்று வைத்துக்கொள், உன் அம்மாவும் அந்த வேலையை ஒரு மணி நேரத்தில் செய்து முடிப்பாள்—இருவரும் சேர்ந்து செய்தால் எவ்வளவு நேரத்தில் செய்வார்கள்.

பையன்:—"மூன்றுமணி நேரத்தில்?"

வாத்தியார்:—"எப்படியடா மடையா?"

பையன்:— "ஆமாம் சார்! இரண்டு பேரும் சும்மா செய்துவிடுவார்களா? அவர்கள் வாக்கு வாதம் முடிவதற்கே எவ்வளவோ நேரம் பிடிக்குமே!"

லி. ரா.



# வர்த்தமானப்பகுதி

**பறவைகளுக்காகக் கிராம அமைப்பு:**

ஸ்ரீ. எப். எல். ஹண்ட் என்பவர் ஒரு புது மாதிரியான கிராமத்தை, பறவைகள் வசிப்பதற்காக அமைத்துள்ளார். அதில் திக்கற்ற பறவைகள் வசிக்க வேண்டுமென்பது அவருடைய கருத்து. அக்கிராமத்தில் பறவைகள் நீந்துவதற்காகக் குட்டையும், ஒரு மாதா கோயிலும், சிறு சிறு குடிசைகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன. மேலும் பறவைகளுக்கு வேண்டிய வைக்கோல், கம்பளி மயிர், முதலியவைகளும் வைக்கப்பட்டிருக்கின்றன. பறவைகள் பசியின்போது சாப்பிடுவதற்காக விதைகள், பழத்துண்டுகள், கொட்டைகள் முதலியனவும் அடங்கிய தின்பண்டசாலைகளும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இதில் பறவைகள் மிக இன்பமாகக் காலங் கழிக்கின்றன.

**ஹங்கேரி சங்கீத வித்வான் திறமை:**

ஹங்கேரி என்னும் தேசத்தில் பிரான்சிஸ் ஜீரீஸ் என்று ஒரு சங்கீத வித்வான் இருக்கிறார். அவர் 'பீராஹோபோன்' என்று ஒரு சங்கீதக் கருவியைக் கண்டுபிடித்திருக்கிறார். ஒரே மனிதர் இதிலுள்ள ஸ்வரங்களை வாசிப்பதனால் ஐந்தாறு பேர் சேர்ந்து உண்டாக்கும் 'பாண்டு' ஒலி முழுதையும் உண்டாக்கலாம். இதைக் கண்டு அத்தேசத்திலுள்ள பாண்டு வாத்தியக்காரர்கள் அதிக கோபங் கொண்டிருக்கின்றனர். அவர்கள் அவருக்கு ஒரு கடிதம் எழுதி, அதில் அவர் அந்த சங்கீதக் கருவியை உற்பத்தி செய்வதை நிறுத்திவிட வேண்டுமென்றும் இன்றேல் அவரைச் சுட்டுவிடுவதாகவும் பய முறுத்துகின்றனர்.

**கண் பார்வை யுடைய மரங்கள்:—**

பறவைகளைப் போல மரங்களும் பார்க்கும் சக்தியை யுடையனவாகவே இருக்கின்றன. ஒரு தோட்டம் அல்லது நந்த வனத்திலுள்ள தண்ணீரைக் கொண்டு செல்லுங் குழாயினடியில் ஒரு துவாரம் இருந்தால் அதை அருகிலிருக்கும் மரம் கண்டு அதன் வழியாகத் தன் வேரைச் செலுத்தி மற்றொரு சிறு மரம் அக்குழாயினருகில் முளைக்கும் படி செய்துவிடுகிறது. பிரம்புக் கொடிகளின் சக்தி மிக அபூர்வமானது. அவை பக்கத்திலுள்ள மரங்களின் மீது தாவி உயரப் போன பிறகு மறுபடியும் திரும்பி கீழ்நோக்கிப் பூமிக்கு வந்துவிடுகின்றது. பிறகு மற்றொரு மரம் ஐம்பது கல் தூரத்தில் இருந்தாலும் இக்கொடியானது ஒரு நாளைக்கு ஒரு அடி வீதம் வளர்ந்து சென்று அம்மரத்தைப் பற்றிக் கொள்கின்றது.

**மகளைப் பெண்டாடிய தந்தை:—**

பர்மாவைச் சேர்ந்த ஹிந்து குன் என்னும் நகரில் வசிக்கும் கோபா என்பவன், சுமார் 16 வயதுள்ள தன் புத்திரியின் மீது மோகங்கொண்டு அவள் வாயில் துணியைத் திணித்து அவளைக் கெடுத்து விட்டான். உடனே தாயும் மகளும்சேர்ந்து அவ்வூர் கிராம முனிசீப் மூலம் போலீஸ் ஸ்டேஷனில் எழுதி வைத்திருக்கின்றனர். வழக்கு விசாரணை நடந்து வருகிறது.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**பிரமோதூதஹு சித்திரைமீ—கலியுகாதி 5032, சாலிவாகனம் 1853,**
**பசலி 1339—கோல்லமாண்டு 1105—ஹிஜரி 1348,**
**இங்கிலீஷ் 1930ஹு ஏப்ரல்மீ—மேமீ**

| சித்திரை | ஏப்ரல் | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | ஞா | ○13-13 | சித்43-3 | சித்60 | வருஷப்பிறப்பு, மேஷ ரவி கா-23-28, விஷு புண்யகாலம் |
| 2 | 14 | திங் | பிர9-58 | சுவா42-5 | அ42-5மா | சைத்ரபகுளம் |
| 3 | 15 | செவ் | துதி8-0 | விசா42-43 | மா42-43சி | வியாதியஸ்தர் குளிக்க |
| 4 | 16 | புத | திரி7-35 | அனு45-0 | சித்60 | சங்காஷ்ட சதுர்த்தி |
| 5 | 17 | வியா | சது8-48 | கே48-48 | பி48-48சி | வராஹ ஜயந்தி |
| 6 | 18 | வெ | பஞ்11-45 | மூல54-3 | அ54-3பிர | |
| 7 | 19 | சனி | சஷ்16-0 | பூரா60 | சித்60 | |
| 8 | 20 | ஞா | சப்21-20 | பூரா0-33 | சி0-33அமி | |
| 9 | 21 | திங் | அஷ்27-13 | உத்7-43 | ம7-43அமி | |
| 10 | 22 | செவ் | நவ33-15 | திரு15-3 | சித்60 | |
| 11 | 23 | புத | தச38-32 | அவி21-55 | பி21-55சி | |
| 12 | 24 | வியா | ஏகா43-0 | சத28-5 | மா28-5சி | |
| 13 | 25 | வெ | து45-20 | பூர33-0 | சித்60 | |
| 14 | 26 | சனி | திர47-48 | உத்36-40 | சி36-40மா | |
| 15 | 27 | ஞாய | சது48-3 | ரே38-40 | அ38-40சி | |
| 16 | 28 | திங் | ●46-5[illegible] | அஸ்39-23 | சித்60 | சர்வத்திர அமாவாசை |
| 17 | 29 | செவ் | பிர44-15 | பர38-48 | சித்60 | வைசாகசுத்தம [னம் |
| 18 | 30 | புதன் | துதி40-43 | கி✱37-5 | அ37-5சித் | கிருத்திகை, சந்திர தெரிச |
| 19 | 1 | வியா | திரி36-15 | ரோ34-30 | மா60 | பரசுராம ஜெயந்தி |
| 20 | 2 | வெ | சது31-13 | மிரு31-23 | சித்60 | மாசசதுர்த்தி விரதம் |
| 21 | 3 | சனி | பஞ்25-43 | திரு27-48 | சித்60 | அவமாகம், கத்திரிஆரம்பம் |
| 22 | 4 | ஞா | சஷ்20-0 | புன23-58 | சித்60 | சஷ்டி, கதிரறுக்க |
| 23 | 5 | திங் | சப்14-15 | பூச20-10 | சித்60 | சீமந்தம், சர்வ முகூர்த்தம் |
| 24 | 6 | செவ் | அஷ்8-35 | ஆயி16-28 | சித்60 | நவக்கிரகசாந்தி செய்ய |
| 25 | 7 | புதன் | நவ3-13 தச58-7 | மக12-58 | சி12-58அ | அவமாகம், சுபமுகூர்த்தம் |
| 26 | 8 | வியா | ஏகா53-38 | பூர9-30 | சித்9-30ம | ஸ்மார்த்த ஏகாதசி |
| 27 | 9 | வெ | து48-43 | உத7-23 | சித்7-23அ | வைஷ்ணவ ஏகாதசி |
| 28 | 10 | சனி | திர46-33 | அஸ்5-30 | மா60 | சனிப் பிரதோஷம் |
| 29 | 11 | ஞா | ச 4[illegible]-8 | சித்4-28 | சித்60 | அவமாகம், நரசிம்மஜயந்தி |
| 30 | 12 | திங் | ○42-58 | சுவா4-20 | சித்4-20ம | ○ சித்ரா பௌர்ணமி |
| 31 | 13 | செவ் | பிர43-3 | விசா5-15 | ம5-15சித் | வைசாக பகுளம், வியாதியஸ்தர் குளிக்க |

1930ஹு மேமீ

| | | | |
|---|---|---|---|
| | சூ-ரா சுக்-பு | குரு | |
| செவ் | 3-மீன-செ 11-ரிஷப-புத 12-ரிஷப-சுக் | | |
| | | | |
| சனி | - | கேது | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" POWER PRESS,
SAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.